






தமிழ்த்தாய் வாழ்க

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக்
கரந்தைத் தமிழ்ச் சங்கத்
திங்கள் வெளியீடு

வெகுதானிய ஆண்டு
**(1938-39.)**

பதினுன்காம் துணர்

14

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகத்தில்
அச்சிடப்பெற்றது
1939



உ

# கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

## தமிழ்ப் புலவர் கல்லூரி

### அறிவிப்பு

இக்கல்லூரி கோடை விடுமுறைக்குப்பின் ஆனித் திங்கள் ரு (19—6—39)ஆம் நாள் திறக்கப்பெறும். கல்லூரியிற் சேர விரும்பும் மாணவர்கள் தபாற்றலை அனுப்பி அச்சிடப் பெற்றுள்ள விண்ணப்பம் பெற்று, கல்லூரி திறப்பதற்கு மூன்று வாரங்கட்கு முன்னரே விண்ணப்பத்தை அனுப்பவேண்டியது. மாணவர்கள் கல்லூரியிலும் விடுதியிலும் நடந்து கொள்ளவேண்டிய விதிகள் விண்ணப்பத்திலேயே அச்சிடப்பெற்றுள்ளன.

த. வே. உமாமகேசுவரன்,
தலைவர்.

## கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்கு அன்பர்கள் உதவிய நன்கொடை

(வெகுதானிய—பங்குனி)

| | | ரூ | அ |
|---|---|---|---|
| திரு. P. சுந்தரமையர் அவர்கள் கரந்தை | | 11 | 11 |
| அரசியலார் (தொழிற்கல்விச் சாலையிடத்திற்கு) | | 94 | 2 |
| ,, Dr. P. M. சொக்கலிங்கம் அவர்கள், நாகை (புத்தாண்டுக்காக கொடுத்தது) | | [illegible] | 0 |
| வீ. சு. பெரியநாயகத்தம்மையார் அவர்கள் (மருந்து வகை) | | 18 | 0 |

## கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் மின்னொளி பரப்பு உதவிய நன்கொடை

| | | | |
|---|---|---|---|
| திரு. இராவ்சாகேப், த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் | | 10 | |
| ,, நா. கந்தசாமி பிள்ளை அவர்கள், தஞ்சை | | 5 | |
| ,, சிவ. குப்புசாமி பிள்ளை அவர்கள், கரந்தை | | 5 | |
| ,, நீ. கந்தசாமி பிள்ளை அவர்கள், பள்ளியகரம் | | 5 | |
| ,, இராவ்சாகேப், ஐ. குமரசாமிபிள்ளையவர்கள் | ,, | 5 | 0 |
| ,, S. K. கோவிந்தசாமி பிள்ளை அவர்கள் | M. A. | 5 | 0 |
| ,, T. M. தயாபரமூர்த்தி முதலியார் ,, (முதற்பகுதி) | B. A. | 1 | 0 |
| ,, ஜெ. எம். சோமசுந்தரம் பிள்ளை ,, (முதற்பகுதி) | B.A.B.L. | 2 | 0 |

## கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்லூரிக்கு உதவிய நன்கொடை

| | | |
|---|---|---|
| திரு. சனற்குமார முதலியார் அவர்கள், கரந்தை | 1 | 0 |

கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை, தஞ்சை.

# கட்டுரையெழுதிய பேரறிஞர்களும் கட்டுரைகளும்





உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

துணர் ௰௪ } வெகுதானிய, சித்திரை { மலர் ௧

## திருக்குறளை எடுத்தாண்ட சங்கப்புலவர்கள்

திரு. ம. நா. சோமசுந்தரம்பிள்ளை அவர்கள்,
தமிழ்ப்புலவர், நாகப்பட்டினம்.

சீத்தலைச்சாத்தனர் மணிமேகலை 22 சிறைசெய்காதை

'தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்
பொய்யெனப் பெய்யும் பெருமழை யென்ற அப்
பொய்யில் புலவன் பொருளுரை தேருய்' எ-து.

இதன்கண் எடுத்தாளப்பட்டது,

'தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை'

ன்னும் திருக்குறள். இதனுள் திருவள்ளுவநாயனுரைச்
ாத்தனுர் பொய்யில் புலவன் எனப் பாராட்டுதல் காண்க.



மணிமேகலை 16 ஆதிரை பிச்சையிட்டகாதை

'மயக்கும் கள்ளும் மன்னுயிர் கோறலும்
கயக்கறுமாந்தர் கடிந்தனர் கேளாய்
பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்றதுண்மையின்'

இதனுள் சாத்தனார் எடுத்தாண்டது,

'உறங்குவது போலும் சாக்காடுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு'

என்னும் திருக்குறள்.

மணிமேகலை சமயக்கணக்கர் தந்திறம் கேட்டகாதை

'பொருளின் உண்மை புலங்கொளல்வேண்டும்
மருளில் காட்சி ஐவகையாகும்
கண்ணால் வண்ணமும் செவியால் ஓசையும்
நண்ணிய மூக்கால் நாற்றமும் நாவால்
சுவையும் மெய்யால் ஊறுமெனச்சொன்ன
இவையிவை கண்டு கேட்டுயிர்த்துண்டுற்றுத்
துக்கமும் சுகமுமெனத் துயக்கற வறிந்து
உயிரும் வாயிலும் மனமும் ஊறின்றி'

இதனுள் சாத்தனார் எடுத்தாண்டது,

'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள'

என்னும் திருக்குறள்.

இத்திருக்குறளையே நக்கீரனார், இறையனார் களவியல் சூ. 40 உரையுள் மேற்கோளாக எடுத்தாண்டவாறு அறிக.

இத்திருக்குறளையே சேரமான்பெருமாளுயனார் திருக் கைலாயஞானவுலாவில் அமைத்துப் பாடினர்.

அவர்,

'இல்லாரை யெல்லாரும் எள்ளுவர் செல்வரை
யெல்லாரும் செய்வர் சிறப்பு'

என்பது முதலிய குறட்பாக்களை அமைத்துப் பாடியவாறும் காண்க.

இனி, நக்கீரனார், களவியலுரையில்

'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப்படும்'

'சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை.'

'பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்குமெனின்'

என்னும் திருக்குறட்பாக்களை யெடுத்துக்காட்டியவாறும் காண்க.

இனிச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளும்,

23 கட்டுரை காதையுள்

'தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுவாளைத்
தெய்வந்தொழுந்தகைமை திண்ணமால்—தெய்வமாய்
மண்ணகமாதர்க்கணியாய கண்ணகி
விண்ணகமாதர்க்கு விருந்து'

என்று திருக்குறளை அமைத்துப் பாடினர்.

இனிப், பொய்யாநாவிற் கபிலர் என்பவர் பாடல்

நற்றிணை—32.

'மாயோனன்ன மால்வரைக்கவாஅன்
வாலியோனன்ன வாங்குவெள்ளருவி
அம்மலை கிழவோன் நந்நயந்தென்றும்
வருந்தினன் என்பதோர் வாய்ச்சொற் றேறாய்
நீயுங்கண்டு நுமரொடும் எண்ணி
அறிவறிந்தளவல் வேண்டும் மறுதரற்
கரிய வாழிதோழி பெரியோர்
நாடி நட்பினல்லது
நட்டு நாடார்தம் மொட்டியோர் திறத்தே'

இதனுள்,

'நாடாது நட்டலிற்கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள்பவர்க்கு'

என்னும் திருக்குறளை அமைத்துப்பாடியவாறு காண்க.

நற்றிணை—1

‘நின்றசொல்லர் நீடுதோன்றினியர்
என்றும் என்றோள் பிரிபறியலரே
தாமரைத் தண்டாதூதி மீமிசைச்
சாந்திற்றொடுத்த தீந்தேன்போலப்
புரையமன்ற புரையோர் கேண்மை
நீரின்றமையா உலகம்போலத்
தம்மின்றமையா நந்நயந்தருளி
நறுநுதல் பசத்தலை யஞ்சிச்
சிறுமை உறுபவோ செய்பறியலரே’

இதன்கண்,

‘நீரின்றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின்றமையா தொழுக்கு’

என்னும் குறட்பா அமைந்திருத்தல் காண்க.

இனி,

‘நீரின்றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டிகொடுத்தோர் உயிர்கொடுத்தோரே’

என்ற குடபுலவியனார் 18-ஆம் புறப்பாட்டின் கருத்தும் அது.

இனி குறிஞ்சிப்பாட்டு 204, 209

‘மைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்
வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு
விருந்துண்டெஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னொடுண்டலும் புரைவதென்றாங்கு,
அறப்புணையாகத் தேற்றி’

இதனுள்,

‘வித்துமிடல்வேண்டுங்கொல்லோ
விருந்தோம்பி—மிச்சில்மிசைவான் புலம்’

என்ற திருக்குறட் கருத்து அமைக்கப்பட்டிருத்தல் காண்க.

இனி, இன்னாநாற்பது என்னும் நூலில்

‘இன்னா—ஒத்தில்லாப் பார்ப்பான் உரை’ என்றோதினர்.

இது,

‘மறப்பினும் ஓத்துக்கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக்கெடும்’

என்னும் திருக்குறட் கருத்தைப்பற்றி நின்றது.

அல்லாமலும் அவர்,

‘ ஊனைத்தின்றூனைப் பெருக்குதல் முன்னின்று ’

என்று பாடினர். இது

‘ தன்னூன் பெருக்கற்குத்தான் பிறிதூண் உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள் ’

என்னும் திருக்குறளை யெடுத்தாண்டது. அங்ஙனம் எடுத்தாண்டார் என்பதற்கு ‘ஊன்பெருக்கல்’ என்னும் தொடர் மொழியே சான்று. கபிலர் என்பார் சங்கப்புலவருள் தலைமைபெற்றவர். இதனைக் ‘கபிலபரணர்’ என்னும் உதாரணச்சொற்றொடரும் ‘கபலபரணரும் வாழி’ என்னும் அங்கதப்பாட்டுப் பகுதியும் வலியுறுத்தும். அக்கபிலர் இத்தனை திருக்குறளை யெடுத்தாண்டார் என்றால், மற்றையோர் எடுத்தாண்டவாற்றுக்குக் கணக்கென்னை ?

இனி, ஊனைத்தின்றூனைப் பெருக்காமை முன்னினிதே’ என்ற இனியவை நாற்பதும் அது.

ஆலத்தூர்கிழார்

புறம் 34.

‘ ஆன்முலையறுத்த அறனில் லோர்க்கும்
மாணிழைமகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த்தப்பிய கொடுமையோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயும் உளவே
நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்
செய்திகொன்றோர்க்குய்தியில்லென
அறம்பாடின்றே ஆயிழை கணவ ’

இதனுள்,

‘ எந்நன்றிகொன்றார்க்குமுய் வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றிகொன்ற மகற்கு.’

என்னும் திருக்குறள் அமைந்து கிடத்தல் கண்கூடு. சங்கப்புலவர் காலத்தே திருக்குறள் கலங்கரைவிளக்கம் ஆக விளங்கியதென்பதற்கு இப்பாட்டே சான்று; அறநூல் என்னப் பட்டமையான்.

இனி,

‘ பாலொடுதேன் கலந்தற்றே பணிமொழி
வாலெயிறூறியநீர்.’

என்பது ஓர் திருக்குறள்—இதைத் தாயங்கண்ணனர் என்பவர் அகத்திலும். காலறிகடிகையார் என்பவர் குறுந்தொகையினும் அமைத்துப் பாடினர்.

அகம் 236,

'புன்காற்பாதிரி அரிநிறத்திரள்வீ
நன்மாமேனி அணி நலம்புலம்ப
இணைதலான்றிசின் ஆயிழைகனைதிறற்
செந்தீயணங்கிய செழுநிணக்கொழுங்குறை
மென்றினைப்புன்கம் உதிர்த்த மண்டையொடு
இருங்கதி ரலமருங் கழனிக்கரும்பின்
விளைகழை பிழிந்த அந்தீஞ்சேற்றொடு
பால்பெய் செந்நெற் பாசவல் பகுக்கும்
புனல்பொருபுதவின் உறந்தையெய்தினும்
வினைபொருளாகத் தவிர்விலர் கடைசிவந்து
ஐய அமர்த்த உண்கண்நின்
வையேர் வாலெயிறூறியநீரே'

குறுந்—267.

இருங்கண்ஞாலத்தீண்டு பயப்பெருவளம்
ஒருங்குடன் இயைவதாயினும் கரும்பின்
காலறி கடிகைக் கண்ணயின்றன்ன
வாலெயி றூறிய:வசையில் தீநீர்
கோலமை குறுந்தொடிக் குறுமகள் ஒழிய
ஆள்வினை மருங்கிற் பிரியார் நாளும்
உறன்முறை மரபிற் கூற்றத்
தறனில் கோணன் கறிந்திசினோரே' எ—று.

கலித்தொகையாசிரியர் (நல்லந்துவனர்) பாடல்.

கலி. 139.

சான்றவிர் வாழியோ சான்றவிர் என்றும்
பிறர் நோயும் தந்நோய்போற்போற்றி அறனறிதல்
சான்றவர்க்கெல்லாம் கடனுல் இவ்விருந்த
சான்றீர் உமக்கொன்றறிவுறுப்பேன் மான்ற
துளியிடை மின்னுப்போல் தோன்றி ஒருத்தி
ஒளியோடுருவென்னைக் காட்டி அளியளென்
நெஞ்சாறு கொண்டாள் அதற்கொண்டும் துஞ்சேன்
அணியலங்காவிரைப் பூவோடெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப
ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்தேன்'

இதனுள்,

‘ அறிவினுறுகுவதுண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக்கடை ’

என்னும் திருக்குறள் அமைக்கப்பட்டிருத்தல் காண்க.

வெண்பூதனர்—குறுந்-83.

‘ அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதமாகப்
பெரும் பெயருலகம் பெறீஇய ரோஅன்னை
தம்மிற் றமதுண்டன்ன சினைதோறும்
தீம்பழந்தூங்கும் பலவின்
ஓங்குமலை நாடனை வருமென்றோளே ’

இதனுள்

‘ தம்மில்லிருந்து தமது பாத்துண்டற்றால்
அம்மா அரிவைமுயக்கு ’

என்னும் திருக்குறள் அமைந்திருத்தல் காண்க.

கடலுள்மாய்ந்த இளம்பெரு வழுதி பாட்டு.

புறம்—182.

‘ உண்டாலம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவதாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலுமிலர் பிறர் அஞ்சுவதஞ்சிப்
புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன்பெறினும் கொள்ளலர் அயர்விலர்
அன்னமாட்சி அனையராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே ’

இது,

‘ விருந்துபுறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற்றன்று ’

என்னும் திருக்குறள் எடுத்தாளப் பட்டிருத்தல் காண்க.

‘ அஞ்சுவதஞ்சாமை பேதமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில் ’

இக்குறளும் வந்தது.

கல்லாடனார் பாடல்

அகம்—113

காப்புக் கைந்நிறுத்த பல்வேற்கோசர்
இளங்கட்கமழும் நெய்தலஞ் செறுவின்
வளம்கெழு நன்னாடன்ன வென்தோள் மணந்து
அழுங்கல் மூதூர் அலரெடுத்தாற்ற
நல்காது துறந்த காதலர் என்றும்.........
அறுதுறை அயிர்மணற் படுகரைப் போகிச்
சேயரென்றலிற் சிறுமையுற்றவென்
கையறு நெஞ்சத் தெவ்வம் நீங்க
அழாஅம் உறைதலும் உரியம் பராரை
அலங்கலஞ் சினைக்குடம்பை புல்லெனப்
புலம் பெயர் மருங்கிற் புள்ளெழுந்தாங்கு
மெய்யிவணொழியப் போகியவர்
செய்வினை மருங்கிற் செலீஇயர் என்னுயிரே.

இதனுள்,

'குடம்பைதனித்தொழியப் புட்பறந்தற்றே
உடம்போடுயிரிடை நட்பு'

என்னும் திருக்குறள் எடுத்தாளப்பட்டவாறு காண்க. இத திருக்குறளில் குடம்பையென்பதற்கு முட்டையென்று பொருள் கூறினார் பரிமேலழகர். அது பொருந்தாமை அறிக.

கரும்பிள்ளைப்பூதனார் பரிபாடல் 10

வையைச்சிறப்பு—

'வீமலிகான் யாற்றின் துருத்தி குறுகித்
தாம் வீழ்வாராகத் தழுவுவார் தழுவெதிராது
யாமக்குறை யூடல் இன்னசைத் தேனுகர்வோர்
காமக்கணிச்சியாற் கையறவு வட்டித்து
சேமத்திரை வீழ்த்துச் சென்றமளிசேர்குவோர்'

இதனுள்

'காமக்கணிச்சி உடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்தகதவு'

என்னும் திருக்குறட் கருத்து அமைந்திருத்தல் காண்க.

(தொடரும்.)

௬

# திரு. வே. வே. ரெட்டியாரவர்கள் ஆராய்ச்சியின் செப்பமுடைமை

பண்டிதர், திருவாளர், ந. மு. வேங்கடசாமிநாட்டார் அவர்கள்

வித்துவான் திரு. வே. வேங்கடராசலு ரெட்டியாரவர்கள் எழுதிய 'கபிலர்' என்னும் நூலின் பொருள்கள் பல திரிபுணர்ச்சியால் எழுதப்பட்டனவாகத் தோன்றினமையின், தமிழ் கற்கும் இளைஞர்பொருட்டு அவற்றைச் சில கட்டுரைகளாக எழுதி வெளிப்படுத்தல் கடனெனக் கருதி, யான் எழுதிய முதற்கட்டுரை '**தமிழ்ப் பொழில்**' துணர் கஉ, மலர் 2-ல் வெளியிடப் பெற்றது. அதன்கண், முகித்தல், அங்கனம் காண்கின்றது, நற்கீரர் என ரெட்டியாரவர்கள் வழங்கிய நால் வேறு சொற்கள் ஆராயப்பட்டன. அவர்கள் வழங்கிய அச்சொல்வழக்கு என்னால் மறுக்கப்பட்டமையின், அவர்கள் அறிவாராய்சிக் குறைபாடுடைய ரென்றுதல், யான் நிறைவுடையேனென்றுதல் கருதினேனாக எண்ணுதிருக்க அவர்களையும் ஏனோரையும் வேண்டுகின்றேன். எனது சிறுமையை என்னின் அறிந்தார் பிறரிலர் என்பது தேற்றம். அங்ஙனம் மிகச் சுருங்கிய அறிவினேனாயினும், எதனையும் உண்மைகாணும் நோக்குடன் ஆராயுமியல்பும், என் அறிவு ஆராய்ச்சிக்குறைவால் நேர்ந்த வழுக்களைப் பிறர் எடுத்துக்காட்டுறின் அதற்கிசைந்து அவற்றைத் திருத்திக்கொள்ளும் விருப்பமும் உடையேன். தமது தவறு யாதாயினும் பிறர் எடுத்துக்காட்டிய வழி அதனை ஏற்றுக்கோடல் நன்மக்கள் இயல்பாகலானும், தமக்கும் பிறர்க்கும் பயனுண்டாக நூலாராய்ச்சி செய்வார்க்கு அஃது இன்றியமையாக் கடப்பாடு ஆகலானும் ரெட்டியாரவர்கள் என்னாற் காட்டலுற்ற பிழைகளுக்காக என்னை முனியாது அவற்றைத் திருத்திக்கொள்ள முற்படுவார்களென எண்ணி

னேன். ஆயின் அவர்கள் 'செப்பமுடையார்க்குச் செய்யும் விண்ணப்பம்' எனத் தலைப்பெயரிட்டு எழுதிய கட்டுரை 'தமிழ்ப் பொழில்' கஅ-ஆம் துணர், க, ο, கக-ஆம் மலர்களில் வெளிவந்ததனைப் படித்து, என் எண்ணம் பழுதாயினமை கண்டேன். அவர்கள் பல பொருந்தாவுரைகளால் தம் பிழைபட்ட முடிபுகளையே சாதிப்பான் முயன்றுள்ளார்கள். மீட்டும் அவையிற்றை மறுத்து உண்மைநிலை நாட்டுதல் கடனாயினமையின் இக்கட்டுரை எழுத நேர்ந்தது. அவர்கள் எழுதியவற்றையெல்லாம் பெயர்த்தெழுதி ஆராயின் இவ்வுரைமிக விரியுமாகலின் இன்றியமையாதன எடுத்துக் காட்டப்படும். இதனைப் படிப்போர் அவர்கள் எழுதியதனையும் உடன்வைத்து நோக்குதல் நன்றாம்.

I

"முகித்தல் என்னுஞ் சொல் திசைச்சொல் என்பது எதனாற் புலனாகின்றதோ, அறிகிலேன். அது தெலுங்கிலும் கன்னடத்திலும் வழங்குதலான் திசைச் சொல்லாகும் எனின், தமிழ்ச் சொற்களுட் பல்லாயிரஞ்சொற்கள் திசைச்சொற்களே யாகும்" என்பது முதலாகச் சில கூறிவந்து, "முகித்தல் என்பது திசைச்சொல் என்றே கொள்ளினும்" என்று தொடங்கிச் சில கூறுகின்றார்கள். இவற்றை நோக்குழித் திசைச்சொல் என்பதுபற்றித் தெளிவான கருத்தொன்றும் அவர்கட்கில்லை யென்பது புலனாகின்றது.

"செந்தமிழ் சேர்ந்த பன்னிருநிலத்துந்
தங்குறிப்பினவே திசைச்சொற்கிளவி"

எனத்திசைச்சொற் கிலக்கண முணர்த்தும் தொல்காப்பியச் சூத்திரவுரையில் இளம்பூரணரும், சேனாவரையரும் செந்தமிழ் நாட்டுத் தென்கீழ்பால் முதலாக வடகீழ்பால் இறுதியாகவுள்ள பொங்கர் நாடு முதலாய பன்னிரு நாடுகளைப் பன்னிரு நிலம் என்பதற்குப் பொருளாகக் கொண்டனர். நச்சினார்க்கினியர் அவற்றுடன், அவற்றின் புறஞ்சூழ்ந்த சிங்களம் முதலிய பன்னிரு நாடுகளையும் கொண்டனர். தெய்வச்சிலையார் அவ்

விருதிறத்துப் பன்னிரு நாடுகளையும் எடுத்துக்காட்டினரேனும், வடவேங்கடந் தென்குமரி யிடைப்பட்ட தமிழ் நாட்டைப் புறஞ்சூழ்ந்த பன்னிரு நாடுகளைக் கோடலே பொருத்தமா மென்னுங் கருத்தினரென்பது அவருரையால் அறியப்படும். மயிலைநாதரும் நன்னூலுரையில் சிங்களம் முதலிய பன்னிரு நாட்டின் பெயர்களையுணர்த்தும் ஓர் சூத்திரப் பகுதியை எடுத்துக்காட்டி, அஃது அகத்தியனார் இயற்றியதாகவும் குறிப் பிட்டார். பிற்கூறிய பன்னிருநாட்டில் கருநடம், தெலுங்கு என்பனவும் அடங்கியுள்ளன. ரெட்டியாரவர்கள் தெலுங்கிலும் கன்னடத்திலுமிருந்து வந்து வழங்குவனவே திசைச்சொல் லாகா எனக்கருதின், பொங்கர்நாடு முதலியவற்றிற் குரியனவும் திசைச்சொல்லாகா என்பது அவர்கள் கருத்தாதல் போதரும். மற்று, தொல்காப்பியனார் கூறிய திசைச்சொல் இற்றென்று அவர்கள் விளக்குவார்களாக.

இனி, "பழைய தமிழிலக்கியங்களில் வழங்காததனால் அது (முகித்தல்) திசைச்சொல்லாகும் எனின், அவற்றில் வழங்காதனவெல்லாம் திசைச்சொற்களே யாகுமன்றோ? ஆயின், நான், நீங்கள், அந்த, இந்த, எந்த, சரி, அனுப்பு, சிரி முதலியனவெல்லாம் பழைய தமிழிலக்கியங்களில் வழங்காதன வாகலின் திசைச்சொற்களேயாகும்" எனவும், "முகித்தல் என்பது திசைச்சொல் என்றே கொள்ளினும், செய்யுளினும் வழக்கினும் வழங்குதலின் அதனை உரைநடையில் வழங்குதல் தவறுதல் யாங்கனம்? திசைச்சொல்லை வழங்கலாகாது என்று இலக்கணம் உளதோ?" எனவும் எழுதியுள்ளார்கள். [யான் எழுதியிருப்பதனை இங்கே தருகின்றேன் "சங்கப்புலவர்களைப் பற்றி ஆராய்ச்சியுரையெழுதும் ஆசிரியரொருவர் பிற்காலத்துத் தலபுராணம் ஒன்றில் ஓரிடத்துக் காணப்படுவதன்றிக் கடல் போற் பரந்துள்ள தமிழிலக்கிய இலக்கணங்களில் யாண்டும் வழங்கப்படாததும், உரையாசிரியன்மார் எவரானும் தீண்டப் படாததும், எவ்விடத்து எத்திறத்து மக்களாலோ அருகி வழங்கப்படுவதுமாகிய திசைச்சோல் ஒன்றை முதன்மையாக நாட்டுவேதும், அதனைப் பழைய தமிழ்ச் சோல் என்று நியத்தப்படுவே

தும் நேர்மையுடையவாகத் தோன்றவில்லை.'' இதில், பழைய தமிழிலக்கியங்களில் வழங்காதன வெல்லாம் திசைச்சொல்லாகு மென்றும், திசைச்சொற்களை வழங்கலாகாது என்றும் யான் கூறினமை பெறப்படுமாறெங்ஙனம்? யான் கூறியவற்றை நெகிழவிடுத்துக் கூறாதவற்றைக் கூறியவாகக் கற்பித்துக் கொண்டு எழுதுவதே செப்பமுடைமை போலும்.

முகித்தல் என்னுஞ் சொல் திருப்புகழில் பலவிடத்தில் வந்துளது எனவும், அச்சொல்லைத் தமிழ் 'லெக்சிக'னில் நோக்கிய யான் அதிற் குறித்திருக்கும் திருப்புகழடிகளைக் கண்டிருத்தல் கூடும் எனவும், அவ்வாறாகவும் 'பிற்காலத்துத் தலபுராணம் ஒன்றில் ஓரிடத்துக் காணப்படுவது' என்று யான் எழுதியது வியப்பினை விளக்கின்றது எனவும், அருணகிரி நாதர் காலம் 14-ஆம் நூற்றாண்டு என்று தெரிதலின் இற்றைக்கு 500 யாண்டுகட்கு முன்னரே அச்சொல் தமிழில் வழங்கிய தாகும் எனவும் அவர்கள் எழுதியுள்ளார்கள். யான் எழுதியது வியப்பு விளைக்கக்கூடியதென்பதில் ஐயமில்லை. ஆயின், தாம் எழுதியதனை நோக்கியே முதற்கண் அவர்கட்கு வியப்புண்டாதல் வேண்டும். "ஆற்றிற் பாலத்தை முகித்தேனல்லேன்" (குற்றாலத்தல. கண்டகசேதன. 39) என்று செய்யுளிலும் வந்துள்ளதனுனும்'' என எழுதிய அவர்கள் அதனினும் முற்பட்ட திருப்புகழில் அச்சொல் வழங்கியிருத்தலை எடுத்துக்காட்டாமை என்னை? அவர்கள் கருத்தின் ஆழம் அறிதற்கரிதாகவுள்ளது! மற்று, திருப்புகழில் வந்துள்ளதனுல் அது பழைய தமிழ்ச் சொல் ஆகுமெனின், சலாம், சபராசு முதலாயினவும் பழைய தமிழ்ச் சொல்லா மென்பது அவர்கள் கருத்திற் கிசைந்தது போலும். "பழைய ஓலை யேடுகளின் இறுதியில் முற்றிற்று என்றுதல், முகிந்தது என்றுதல் எழுதியிருத்தலை ஓலைச் சுவடி நோக்கினுர் நன்கறிவர்'' என்கின்றுர்கள். ஓலைச்சுவடி நோக்கிய பெருமை கற்றுர் பலருக்குண்டு. நோக்கியதோ டமையாது எண்ணிறந்த சுவடிகளை ஆராய்ந்து வெளியிட்டவர்கள் அச்சொல்லை ஓரிடத்தும் வழங்காது விட்டமை என்னை? "முகிந்தது

என்பது முற்றிற்று—பூர்த்தியாயிற்று என்னும் பொருளது. இச்சொல்லை நூன் முழுவதிலும் எவ்வாறு வழங்குதல் கூடும்?'' என உரைக்கின்றார்கள். அதனை வழங்குதற்கு நூலின்கண் வேறிடமே வாய்க்கவில்லை! யென்பது பெரியதோர் வியப்பே! அது கிடக்க.

பழைய தமிழிலக்கியங்களில் வழங்காதன என்று அவர்கள் எடுத்துக்காட்டிய சொற்களில் 'சிரி' என்பதும் ஒன்று. அது குறித்து அவர்கள் ''சிரி என்பது நகை என்பதன் மரூஉ என்றுங் கூறிவிடலாம் போலும்'' என்று கூறி நகையாடுகின்றார்கள். அதனை நகை யென்பதன் மரூஉ என்று கருதுகின்றவர் யாரோ? ''விலாவிறச் **சிரித்திட்டேனே**'' என்று திருநாவுக்கரசரும், ''**சிரிப்பார்** களிப்பார் தேனிப்பார்'' என்று மாணிக்கவாசகரும், ''என்றுனிறையோனது கேட்டவர்........சிரித்தார்'' என்று சேக்கிழாரும் ''**சிரித்தது** செங்கட் சீயம்'' என்று கம்பநாடரும் அதனை வழங்கியுள்ளார்கள். இங்ஙனம் தமிழுக்கு வேந்தர்கள் எனத்தக்க பழைய பெருமக்களாலும், நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்களாலும் பயில வழங்கப் பெற்றுள்ள இச்சொல்லை ''நகையென்பதன் மரூஉ என்று கூறிவிடலாம் போலும்'' என ரெட்டியாரவர்கள் உரைப்பதன் நோக்கம் இதுவெனப் புலனாகவில்லை.

முகித்தல் என்னுஞ் சொல்லைக் குறித்துத் தடை நிகழ்த்திய யான் 'அநுப்பு', 'நீங்கள்' என்னுஞ் சொற்களை வழங்குதல் தகாது என்று சாற்றுகின்றார்கள். அவர்கள் கருத்து, யான் இவற்றை வழங்குதல் தவறாகாமை போல அவர்கள் அதனை வழங்குதலும் தவறாகாது என்று காட்டுவதோ? அவர்கள் அதனை வழங்குவது தவறுதல் போல யான் இவற்றை வழங்குவதும் தவறாகும் என்று காட்டுவதோ? யாதென அறியக்கூடவில்லை. முகித்தல் என்னுஞ் சொற் போலன்றி, இவை தமிழ் நாடெங்கணும் பொருளறிந்து பேசப்படுவன வாதலையும், தகுதியுடைய புலவர் பலராலும் இவை பேசப்பட்டும் எழுதப்பட்டும் வருதலையும் ஓர்தல்வேண்டும். அன்றி

யும், இச்சொற்களைப் பழந்தமிழிலக்கியங்களில் வந்துள்ள பழைய தமிழ்ச் சொற்கள் என யான் ஓரிடத்தும் கூறவில்லை என்பதனையும் அவர்கள் சிந்தித்தல் வேண்டும்.

## II

இனி, அறிஞர் பலரும் 'அங்ஙனம்' முதலியவாக வழங்கி வருஞ் சொற்களை ரெட்டியாரவர்கள் 'அங்கனம்' முதலிய உருவினவாகத் திரித்து, அவர்கள் எழுதிய 'பரணர்', 'கபிலர்' என்னும் நூல்களினும், 'தமிழ்ப் பொழி'லில் வெளியிட்ட கட்டுரைகளினும் வழங்கியிருப்பதோடு, 'கபிலர்' முன்னுரையில் அவ்வாறு வழங்கினமைக்குக் காரணமும் கூறியுள்ளார்கள். அது, "ஆங்கனம், ஈங்கனம், யாங்கனம்" என்னுஞ் சொற்களே பழைய செய்யுட்களில் வந்திருத்தலானும், ஙகரம் மொழி முதற்கண் வாராதென்று தொல்காப்பியம் கூறுதலானும் அங்கனம் ஆங்கனம் இங்கனம் ஈங்கனம் எங்கனம் யாங்கனம் என்னுஞ் சொற்களே பழமைய என்பது அறியப்படும் ஆகலின் யான் இந்நூலில் அங்கனம் இங்கனம் யாங்கனம் என்னுஞ் சொற்களையே வழங்கியுள்ளேன்" என்பது யான் அதனை ஆராய்ந்த பின்னர், அவர்கள் செப்பமுடையார்க்குச் செய்த விண்ணப்பக் கட்டுரையில் "அங்ஙனம் முதலிய சொற்களை அவ்வடிவில் வழங்குதலை யான் யாண்டும் மறுத்திலேன். யான் மறுப்பது வியப்பாகவுளது என்று நாட்டாரவர்கள் எழுதியிருப்பதுவே வியப்பாகவுள்ளது. மாணவர் பொருட்டு யான் எழுதியிருக்கும் புஸ்தகங்களில் அங்ஙனம் இங்ஙனம் யாங்ஙனம் என்பவற்றையே வழங்கியுள்ளேன்" என ஓரிடத்திலும், "கலாசாலை மாணவர்க்காக யான் எழுதியிருக்கும் புஸ்தகங்களில் ஓரிடத்திலாதல் அங்கனம் யாங்கனம் என்னுஞ் சொல் வந்தில; அங்ஙனம் முதலிய சொற்களே வந்துள்ளன" எனப் பிறிதோரிடத்திலும் எழுதியுள்ளார்கள். அவ்வாறிருப்பின், அவற்றையும், 'பரணர்' முதலியவற்றையும் பார்க்கும் ஒருவர், மாணவர்க்குப் புத்தகங்கள் எழுதிய திரு. வேங்கடராஜலு ரெட்டியாரவர்களும் வேறு பெரியோர்களுக்காகப் 'பரணர்'

முதலிய நூற்கள் இயற்றிய திரு. வேங்கடராஜலு ரெட்டியாரவர்களும் வேறு என்றுதான் கொள்வர். என்னை? முன்னைய புத்தகங்களில் யாண்டும் 'அங்ஙனம்' முதலிய சொல்வழக்கும், பின்னையவற்றில் 'அங்கனம்' முதலிய வழக்குமே காணப்படுதலின் என்க. ரெட்டியாரவர்களும், சங்கப்புலவர்களாகிய பரணர் கபிலரும் வேறு, பதினோராந் திருமுறையிலுள்ள சில நூற்களியற்றிய பரணர் கபிலரும் வேறு எனச் சொற்களின் வழக்கு வேற்றுமை முதலியன கொண்டு துணிந்துள்ளார்களாதலின் அம்முறைபற்றிப் பிறர் செய்யும் ஆராய்ச்சி முடிபுகளை அவர்கள் மதித்தலே வேண்டும்! 'பரணர்' 'கபிலர்' என்னும் நூற்களியற்றிய ரெட்டியாரவர்கள் வழங்கிய சொற்களே என் ஆராய்ச்சிக்குரியவாகும்.

"யாங்ஙனம் ஒத்தியோ வீங்குசெலன்மண்டிலம்' எனத் திரியாது கூறினும் எதுகையாதற்கு, இழுக்கின்றாம். அங்ஙனமாகவும் எதுகை மோனைகளின் நிர்ப்பந்தம் இல்லாதகாலத்தில் ---இல்லாத பாவில், புலவரொருவரல்லர் — பலரும் -- அச் சொல்லை வழங்கிய புலவரனைவருமே—ஙகரத்தைக் ககரமாகத் திரித்தே வழங்கினர் என்பது எத்துணை அமைவினது!" என்று எழுதியுள்ளார்கள். இதில் 'இழுக்கின்றாம்' என்பது என்று எழுதப்பட்டதே. புலவ காறுமுள்ள பகுதி முன்னர் என்னால் எழுதப்பட்டதே. புலவரெல்லாருமே ஙகரத்தைக் ககரமாகத்திரித்து வழங்கினர் எனல் என்கருத்தென்று எங்ஙனம் அறிந்தார்களோ? யான் எழுதியது ஒரோவழிக் ககரவுருவிற் காணப்படின் அதற்குக் காரணம் காட்டியபடியேயாம், "செய்யுட் செய்யும் புலவர் எதுகைத் தொடையில் ஙகரத்தைக்ககரமாகத் திரித்து வழங்குதல் இயல்பே" என்று எழுதிய யான், அதனையடுத்து, "யாங்ஙனமொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்' எனத்திரியாது கூறினும் எதுகையாதற்கிழுக்கின்றாம்" என்றும், இறையனார் களவியலின் மூன்றாஞ் சூத்திரம் 'ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன்' என்றே படிக்கப்பட்டு வருகின்றது" என்றும் எழுதியிருப்பவற்றை நோக்குவார், ஙகரவுருவில் இருப்பதே இயல்பாம் என்பதும், ககரவுருவிற் காணப்படுவன சில

எடுழுதுவோரால் நேர்ந்தனவாகும் என்பதும் அன்றோ என் கருத்தெனக்கொள்ளாநிற்பர்? செட்டியாரவர்கள் என் கருத்துக்களைத் தமக்கு வேண்டியவாறெல்லாம் திரித்துரைப்பது முறையாகுமா? 'பண்டைப்புலவர்தஞ் செய்யுளில் எதுகை மோனைகளை நியதியாகக் கொள்ளாது விடுத்தனர்' எனவும், 'யாங்ஙன மொத்தியோ வீங்கு செலன் மண்டிலம்' எனத் திரியாது கூறினும் எதுகையாதற்கு இழுக்கின்றும்' எனவும் கூறிய அவர்களே, "இறையனார்களவியல் மூன்றாஞ் சூத்திரம் 'ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன்' என்றே படிக்கப்பட்டு வருகின்றது" என யான் எடுத்துக்காட்டியவழி, அதனை ஏற்றுக் கொள்ள மனமின்றி, "சூத்திரத்தின் இரண்டு மூன்று நான்காம் அடிகளை நோக்கின், முதலடி, 'ஆங்கனம்......' என்றே அமைந்திருக்கும் என்பது எளிதிற் புலனாகும்" என்கின்றார்கள். எத்துணை முரண்பாடு காண்மின்! எதுகையே வேண்டுவதின்று என்றும், மூன்றும் எழுத்து ஙகரமாகவும் ககரமாகவும் மாறியிருப்பினும் எதுகையாமென்றும் பண்டையோர் கருத்தினைக் கண்டுரைத்த அவர்கள் அவ்விரண்டனையும் காற்றிலே பறக்கவிட்டு, பின் மூன்றடிகளில் பாங்கினோரில், பாங்கிலன், ஆங்க என வந்திருத்தலின், முதலடியிலும் ஆங்கனம் என்றே இருக்க வேண்டுமென்பது சால அழகிது.

"பழைய பதிப்புக்களில்,

'ஆங்ஙனம் விரிப்பின் அளவிறந்தனவே பாங்குற வுணர்ந்தோர் பன்னுங்காலை' என்று பதிக்கப்பட்டிருந்த தொல்காப்பியச் சூத்திரம், இப்பொழுது திரு. வே. துரைசாமி ஐயரவர்களைக் கொண்டு பரிசோதித்துத் திரு. கனகசபைப் பிள்ளையவர்கள் வெளியிட்ட பதிப்பில், 'ஆங்கனம்............காலை,

என்று பதிக்கப்பட்டுளது. துரைசாமிஐயரவர்கள் பாடத்தைத் திருத்திவிட்டார்கள் என்று நாட்டாரவர்கள் கூறிவிடுவார்கள் போலும்" என்றும், "அகநானூற்றில் 'யாங்ஙனம்' என்று பதிப்பித்துள்ள மூன்று இடங்களிலும் (செய்யுள் 27, 90, 378) திரு. S. வையாபுரிப்பிள்ளையவர்களிடமிருக்கும் பழைய ஓலையேட்டில் 'யாங்கனம்' என்றே இருக்கின்றது. இஃது

ஏடெழுதினோர் தவறு என்று நாட்டாரவர்கள் கூறுவார்களா யின் என் செய்வது" என்றும், "அச்சுப்புத்தகங்களில் ஆங்ஙனம், யாங்ஙனம் என்று பதித்திருத்தற்குக் காரணம் அவர்க்குள்ள நன்னூற்பயிற்சியே யாகும்" என்றும் எழுதி யுள்ளார்கள். இதிலிருந்தே தொல்காப்பியமும், அகநானூறும் பழைய ஏட்டுச்சுவடிகளிலிருந்து முதலில் அச்சிட்டவர்கள் 'ஆங்ஙனம்' எனவும், 'யாங்ஙனம்' எனவுமே அச்சிட்டுள்ளார் கள் என்பது புலனும். அகநானூறு மயிலை திரு. இராஜகோபால ஐயங்காரவர்களாலும், மகாவித்துவான், திரு. ரா. இராக வையங்கார் அவர்களாலும் ஆராயப்பட்டது. தொல்காப்பியச் செய்யுளியலை நச்சினார்க்கினியர் உரையுடன் அச்சிட்டவர்கள் மகாவித்துவான், திரு. ரா. இராகவையங்கார் அவர்களே. அவர்கள் எங்கெங்கு கிடைத்த எத்தனை ஏட்டுச்சுவடிகளை ஆராய்ந்து அதனைப் பதித்துள்ளார்கள் என்பது அப்புத்தக முகவுரையால் அறியப்படும். அப்பதிப்பிலே, செய்யுளியல் 51-ஆம் சூத்திரத்தில் "ஆங்ஙனம் விரிப்பின்" என்றும், 213-ஆம் சூத்திரத்தில் "ஆங்ஙனமறிப" என்றும், 242-ஆம் சூத்திரத்தில் "ஆங்ஙன மொழுகின்" என்றும் 'ஆங்ஙனம்' என்னுஞ்சொல் அவ்வுருவினதாகவே அச்சிடப் பெற்றுளது. அவர்கள் நன்னூற் பயிற்சியால் அங்ஙனம் செய்து விட்டார்களென்பது ரெட்டியாரவர்களின் கருத்தாகின்றது. பலராலும் நன்கு மதிக்கப்பெற்ற சிறந்த புலவர்களைத் தொல்காப்பியப் பயிற்சி யில்லாரென்றும், நன்னூற்பயிற்சியொன்றே உடையாரென்றும் குறைத்துரைப்பதே தமது பெருமையை மிகுப்பதாகுமென அவர்கள் கருதியுள்ளார்கள் போலும்! அவ்வளவு பெருமித முடைய அவர்கள் "ஆங்கனம்....' (எனத்) துரைசாமி ஐயரவர் கள் பாடத்தைத் திருத்திவிட்டார்கள் என்று நாட்டாரவர்கள் கூறிவிடுவார்கள் போலும்" என, அங்ஙனங் கூறின் எனது நா வெந்துவிடுமென்பது போலப் புகன்றுள்ளார்கள். திரு. கனக சபைப்பிள்ளையவர்கள் வெளியிட்ட பொருளதிகாரப்பதிப்பு முன்னைய பதிப்புக்களில் உள்ள நூற்றுக்கணக்கான பிழைகளில் மிகச்சில திருத்தப்பெற்றும், சிலகுறிப்புக்கள் சேர்க்கப்

பெற்றும் அழகாகப் பதிக்கப் பெற்றுளதென்பதும், குறைந்த விலையில் மாணுக்கர்கள் பெற்றுப் பயனடையுமாறு உதவப் பெற்றுளதென்பதும் உண்மை. ஆனால், அஃது, ஏடுபார்த்து முழுதும் செப்பஞ் செய்யப்பட்டது என்பதுபோல் மாறுபாடு பிறிதில்லை. புத்தகத்திலுள்ள அப்பிழைகளெல்லாம் ஏட்டிலும் இருந்தனவாயின், ரெட்டியாரவர்கள் 'ஏடு' 'ஏடு' என்று, அதன் ஆணைக்கு அடங்கியொழுகுமாறு கூறுவதெல்லாம் பொருளில்லா வறுங்கூற்றேயாகும். மகாமகோபாத்தியாய, டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களின் பெயரையும் பதிப்பையும் ஓரோவழித் தமக்கு அரணுக அமைத்துக்கொள்ளும் ரெட்டியாரவர்கள், ஐயரவர்கள் தமது உரை நடையில் எவ்விடத்தும் 'அங்ஙனம்' முதலியசொற்களை 'அங்கனம்' முதலியவாகத் திரியாது வழங்குங்காரணத்தைத் தாமாக ஆராய்ந்தோ, அவர்களோடு உசாவியோ அறிந்து, தாமும் அதனைப் பின்பற்றுவதன்றோ முறையாகும் ?

" இங்ஙன மிரண்டு திங்க ளேகலு மேக வேலான்
அங்ஙனம் புணர்ந்த வன்பி னவண்முலைப் போக நீக்கி
எங்ஙன மெழுந்த துள்ள மிருளிடை யேகலுற்றான்
தங்கிய பொறியினுக்கந் தனக்கொர்தே ராக நின்றான் "

(சீவகசிந்தாமணி—1359)

என்பது ஐயரவர்கள் பதிப்பித்தது தானே? இவ்விடத்து நன்னூற் பயிற்சியாற் பதிப்பித்தார்கள் என்றே கூறுவார்கள் போலும்!

இனி, அவர்கள், " வழங்குதற்கு எளிதாகிய அங்கனம் என்னுஞ் சொல் வழங்குதற்கு அரிதாகிய அங்ஙனம் எனத் திரியாது என்றார்கள். இதனை அறியின், மெல்லொற்றுத் தன் இன வல்லெழுத்தோடு கூடிவருஞ் சொல் வழங்குதற்கு எளியது என்பதும், மெல்லெழுத்து இரட்டித்து வருஞ்சொல் வழங்குதற்கு அரியது என்பதும் அவர்கள் கருத்தாதல் நன்கு புலனுகும் " எனக்கூறி, ஒன்று, அன்று முதலாயின ஒன்னு, அன்னு

முதலியவாகத் திரிந்து வழங்குதல் என்னை? என வினவுகின் றூர்கள். வழங்குதற்கு எளிதாகிய அங்கனம் என்பது அரி தாகிய அங்ஙனம் எனத் திரியாது எனக் கூறியதிலிருந்து, அவர்கள் பிற்கூறியவெல்லாம் என் கருத்தாகுமென எங்ஙனம் அறிந்துகொண்டார்களோ தெரிந்திலது. எழுத்திலும், சொல் லிலும், தொடரிலும் சில தம்மளவில் யாவரும் வழங்குதற்கு அரியனவாகவுள்ளன. ழ என்னும் எழுத்து ளகரமாகவும், யகரமாகவும் சிற்சிலரால் வழங்கப்படுதல் கண்கூடு. சில பகுதி யிலுள்ளவர்கள் அதனை ஷ எனவும் ஒலிக்கின்றனர். 'அங்ஙனம்' முதலாயினவும் அவ்வாறே திருந்தா நாவினோர்க்கு வழங்குதற்கு அரியவாதலை யாவரும் உணர்வர். இஃது உண்மைக்கு மாறுகு வதோ? இனி, மங்கலம், கஞ்சி, சந்தனம், மாங்காய், தேங்காய் என்பன மலையாளத்தில் முறையே மங்ஙலம், கஞ்ஞி, சந்நனம், மாங்ஙா, தேங்ஙா என வழங்குதலின் ங்ங ஒலி அரிதென்பதும், ங்க ஒலி எளிதென்பதும் பொருந்தா என்கின்றூர்கள். கஞ்சியும் சந்தனமும் ஈண்டைக்கு வேண்டா. மங்ஙலம், மாங்ஙா, தேங்ஙா என மலையாளத்தில் வழங்குதற்குரிய காரணத்தை அம்மொழி வரலாறு ஆராய்வார் ஆராய்க. திங்கள், பொங்கல், பங்குனி, கங்குல், மங்குல், சங்கம் முதலிய சொற்களைத் தமிழ்மக்கள் திங்ஙள், பொங்ஙல் முதலியவாகத் திரித்து எங்கேனும் வழங்கு கின்றூர்களோ? அப்படி வழங்கின் அதனை எடுத்துக் காட்டு தலும், அன்றேல் வாளா அமைந்திருத்தலுமன்றோ நேர்மை யாகும்?

இனி, மரபு நிலைதிரிதல் என யான் எழுதியது குறித்தும், 'ஙகரத்துடன் மயங்குதற்குரிய வேறு மெய் அதனோடு பிறப்பொற்றுமையும் ஒலியொற்றுமையு முடைய ககரம் ஒன்றுமேயாம்' என யான் எழுதியதில் உள்ள ஒலியொற் றுமை என்பது குறித்தும் அவர்கள் கூறியவற்றுக்கெல்லாம் மாறு உரைப்பின் இவ்வுரை வெறிதே விரிவதாதலையும், அங்ங னம், அங்கனம் என்பவற்றுள் பழமையது யாது என்னும் ஆராய்ச்சிக்கு அவை இன்றியமையாதன அல்லவாதலையும்

கருதி, அவற்றை இக்கட்டுரையில் விட்டொழிக்கின்றேன். வினைத்தொகை, பண்புத்தொகைகளைப் பிரித்துப் புணர்த்தாமைக்கு உரைகாரர்கள் கூறியுள்ள காரணங்களை அவர்கள் எடுத்துக்காட்டியிருப்பதன் ஆராய்ச்சியும் ஈண்டைக்கு வேண்டற்பாலதன்று. தொல்காப்பியர் அங்ஙனம், அங்கனம் என்பவற்றுள் யாதேனும் ஒன்றன் ஆட்சி புலப்பட விதிகூறியிருப்பின், அஃதொன்றே, அதற்கு மாறாகக் கூறப்படும் காரணங்களையெல்லாம் சிதைத்தொழித்து உண்மையை நிலைநாட்டுவதற் குரியதாகும். இலக்கியங்களில் ஒரு சொல் இருவகையாக வழங்கின் அவற்றுட் பழையதாய வழக்கு இதுவெனத் துணிதல் பெரும்பாலும் அரிதாகும். அடம்பு, அடும்பு; அணிமை, அணுமை; குரிசில், குருசில்; பரிதி, பருதி; என இச்சொற்கள் இருதன்மையாகவும் பழைய செய்யுட்களில் வந்துள்ளமை காண்க. இவற்றுள் பழையவடிவு, அன்றி, உண்மைவடிவு இதுவெனத் துணிதலாகாமையின் ஓர் பதிப்பில் ஒரு தன்மையாகவும், பிறிதொரு பதிப்பிற் பிறிதொரு தன்மையாகவும் இச்சொற்கள் பதிக்கப்பட்டு வருகின்றன. தாழக்கோல் எனப் பொருள்படும் ஓர் சொல் 'தாழ்' எனவும், 'தாள்' எனவும் இலக்கியங்களில் வழங்கினும், ஆசிரியர் தொல்காப்பியனார் ழகார வீற்றில் வைத்து,

> "தாழென் கிளவி கோலொடு புணரின்
> அக்கிடைவருதல் உரித்து மாகும்"

என விதிகூறியிருத்தலின், தாழ் என்பதே பழைய உருவாமென அறுதியிடப்படுமன்றோ? இவ்வாற்றால் அங்ஙனம் முதலியவற்றின் வடிவு துணிதற்கு இதுகாறும் நிகழ்த்திய தடை விடை யாவற்றினும் பார்க்கில் ஈண்டெடுத்துக் கொள்ளப்படும் தொல்காப்பிய விதிபற்றிய ஆராய்ச்சியே இன்றியமையாச் சிறப்பிற்றாகும்.

தொல்காப்பிய நூன்மரபில் உடனிலை மெய்ம்மயக்கத்திற்கு விதிகூறிய

> 'மெய்ந்நிலை சுட்டின் எல்லாவெழுத்தும்
> தம்முற் றாம்வரூஉம் ரழவல் லங் கடையே'

என்னுஞ் சூத்திரத்தை யான் எடுத்துக்காட்டி, அதில், ர, ழ என்னும் இரண்டும் ஒழிந்த பதினாறு மெய்யும் தம்முன் தாம் வந்து மயங்குமென் ஆசிரியர் விதித்திருத்தலின் ஙகரவொற்றின் முன் ஙகரம் வந்து மயங்கும் சொல் இருந்ததாகல் வேண்டும் எனவும், தமிழிலே சுட்டுவினாக்களின் பின் ஙனம் என்பது இயைந்துவரும் அங்ஙனம் முதலிய சொற்களன்றி ஙகரம் உடனிலையாக மயங்கற்குரிய வேறுசொல் இல்லை எனவும் கூறினேன். அங்ஙனம் முதலிய சொற்களை அ—ஙனம் என்றிங்ஙனம் பிரித்துப் புணர்த்துவது தொல்காப்பியர் கருத்தன்றாகலின் ஙகரம் மொழிமுதற்கண் வருமென அவர் விதித்திலர் எனவும் உரைத்தேன்.

இவற்றிற்கு ரெட்டியாரவர்கள் கூறிய மறுப்புரையாவன :—

1. அங்ஙனம் என்பதற்குத் தொல்காப்பியர் கொண்ட பொருள் அத்தன்மை, அப்படி என்பனவென்னின், ஆண்டு அகரம் சுட்டுப்பொருள் தருதலின் ஙகரம் மொழி முதல் வந்ததாகும். ஆகவே, அஞ்ஞாலம் அந்நாள் அம்மணி என்னுஞ் சொற்களைப் பிரித்து, 'சுட்டின் முன்னர் ஞ ந மத் தோன்றின்' என்று விதி கூறிய ஆசிரியர் 'சுட்டின் முன்னர் ங ஞ ந மத் தோன்றின்' என்று விதிகூறி, அங்ஙனம் என்பதனையும் அமைத்திருப்பர்.

2. 'மெய்ந்நிலை சுட்டின்' என்னுஞ் சூத்திரத்தில் ஙகரத்தொடு ஙகரம் மயங்குதற்கு அங்ஙனம் இங்ஙனம் என்னும் சொற்களையே ஆசிரியர் கருதினர் என்று துணிதல் அமையாது.

3. உரையாசிரியர் அதற்கு எங்ஙனம் என்னுஞ் சொல்லை உதாரணமாகக் காட்டியதும் பொருந்தாது.

4. அங்ஙனம் முதலிய சொற்கள் தொல்காப்பியனார் காலத்தில் வழங்கியிருக்குமேல் தொல்காப்பியத்திலும் சங்க நூல்களிலும் ஆங்ஙனம் ஈங்ஙனம் யாங்ஙனம் என்பன காணப்படாமல் ஆங்கனம் ஈங்கனம் யாங்கனம் என்பனவே காணப்படுதற்கு நியாயம் இல்லை.

5. ஙகரத்தின்முன் ஙகரம் வருதற்கு உதாரணம் 'பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவுமுரைத்தனரே' என்னும் அடியில் ஙகரம் இரண்டு வந்திருத்தல் போல்வதாகும். தனிமெய்யோடு தனிமெய் மயங்குதலை இச்சூத்திரத்திற் கொள்ளாக்கால், 'கண்ண் கருவிளை,' 'பொன்ன் பொறி சுணங்கு' என்பன போல வருபவற்றிலெல்லாம் மெய்கள் மயங்கி நிற்றற்கு இலக்கணமின்றாகும்.

இவற்றுள் 4-ஆவதாகக் குறிக்கப்பட்டசெய்தி உண்மைக்கு மாறாயதென்பது யான் மேலெடுத்துக் காட்டியவற்றிலிருந்து புலனாகும். மற்றும், இச்சூத்திர ஆராய்ச்சியினால் உண்மை துணியவேண்டுவது முறையாகவும், அதற்குமாறாகத் தாமே துணிந்துகொண்டதொரு பிறழ்ச்சி முடிபுக்கு இச்சூத்திரப் பொருளை இணக்க முயல்வதாகவும் உள்ளது. ஆகலின் அதனையொழித்து, ஏனையன இங்கு ஆராய்தற்குரியன.

1. அங்ஙனம் என்றில்லாது, ரெட்டியாரவர்கள் கொள்கைப்படி அங்கனம் என்றிருப்பினும், அச்சொல் அத்தன்மை எனப் பொருள்படுமாகலின், அ என்னுஞ் சுட்டு தன்மை எனப் பொருள்படும் கனம் என்பதனோடு புணர்ந்ததெனல்வேண்டும். தொல்காப்பிய உயிர் மயங்கியலில்

"வினையெஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்
எனவெ னெச்சமும் சுட்டின் இறுதியும்
ஆங்க வென்னும் உரையசைக் கிளவியும்
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே"

என அகர வீற்றிலும்,

"இகர விறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே"

"இனியணி யென்னுங் காலையும் இடனும்
வினையெஞ்சு கிளவியும் சுட்டும் அன்ன"

என இகர வீற்றிலும்,

"உகர விறுதி அகர வியற்றே"

"சுட்டின் முன்னரும் அத்தொழிற் ருகும்"

என உகர வீற்றிலும் ஆசிரியர் விதி கூறியிருத்தலின், கனம் என்பதொரு சொல் தன்மை எனப் பொருள்படுவதாயிருந்து, அகரம் முதலிய சுட்டுக்களோடு புணர்ந்திருப்பின், அக்கனம் என்பது முதலியவாக வலிமிக்கன்றே முடிந்திருக்கவேண்டும்? அவ்வாறின்மையின், தம் கூற்றுத் தமது கொள்கையினையே சிதைத்தொழிப்பதனை ஓராது, அவர்கள் அங்ஙனம் என்பதன் உண்மையை மறுக்கப் புகுந்தது என்னையோ?

2. 3. அங்ஙனம் என்பது ஆசிரியர் கருத்தாகாது என்ப தற்கும், உரையாசிரியர் காட்டிய உதாரணம் பொருந்தாது என்பதற்கும் மற்றும் அவர்கள் கூறியன ஆராயற்பாலன.

"ரழ ஒழிந்த மற்றைய மெய்யெழுத்துக்கள் தம்மொடு தாம் மயங்கும் என்பதுவே சூத்திரத்தின்பொருள். இதனால், ஙகரத்தொடு ஙகரம்மயங்குதற்கு அங்ஙனம் இங்ஙனம் என்னுஞ் சொற்களையே ஆசிரியர் கருதினார் என்று துணிதல் அமையாது. ஆயின் உரையாசிரியர், எங்ஙனம் என்னுஞ் சொல்லையே உதா ரணமாகக் காட்டினாரால் எனின், அதனை நோக்குதும்;

"யாரழ என்னும் புள்ளி முன்னர்
முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும்"

என்னுஞ் சூத்திரத்தின் உரையில், யாழக்களுக்குமுன் ஙகரம் வருதற்கு உதாரணமாக அவர், வேய்ஙனம், வேர்ஙனம், வீழ்ஙனம் என்பவற்றைக் காட்டியுள்ளார். இவ்வுதாரணங்களில் வேய், வேர், வீழ் என்பன நிலைமொழிகளாகலின், ஙனம் என்பது வரு மொழி என நன்கறியப்படும். ஆகவே ஙகரம் மொழி முதல் வந்ததாகுமன்றே? இவ்வுதாரணமே ஆசிரியர் கருதினாராயின், 'முதலாகெழுத்து ஙகரமொடு தோன்றும்' என்று ஙகரத்தைப் பிரித்துக் கூறுதலின்றி, 'முதலாகெழுத்துத் தோன்றும் என்ப' என்பது போலன்றே சூத்திரஞ் செய்திருப்பார்? ஙகரம் மொழிமுதல் வாராததனானன்றே அதனை முதலா கெழுத் தொடு சேர்க்காது பிரித்துக் கூறினார்? இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர் காட்டிய 'வேய்ஙனம்' முதலியவை உதாரண

மாகுமோ? இதுபோன்றே, 'மெய்ந்நிலை சுட்டின்' என்னுஞ் சூத்திரத்தின் உரையில் அவர் காட்டிய' எங்ஙனம்' என்னும் உதாரணமும் அமைவுடையதன்று" என்று கூறியுள்ளார்கள்.

'யரழ' என்று தொடங்கும் சூத்திரம் மெய்ந்நிலை சுட்டின்' என்னுஞ் சூத்திரத்தை யொட்டி முற்பட அமைந் துளது. யரழ வொற்றின்முன் ஙகரம் வந்து மயங்குதலுண் டென்பதும், ஙகரம் தன்னொடு தான் மயங்குதலுண்டென்பதும் இவ்விரு சூத்திரத்தாலும் பெறப்படுகின்றன. முன்னதற்கு வேய்ஙனம்' முதலியவற்றையும், பின்னதற்கு 'எங்ஙனம்' என்பதனையும் உரையாசிரியரும், நச்சினார்க்கினியரும் உதா ரணங் காட்டினர். இரண்டு சூத்திரத்திற்கும் இருவரும் காட்டிய இருவகை உதாரணமும் பொருந்தா என்று ரெட்டியா ரவர்கள் கூறுகின்றார்கள். பின்னதற்கு அவர்கள் காட்டும் உதாரணம் பின்பு ஆராய்தற்குரித்து. யரழ முன் ஙகரம் மயங்குதற்கு உரையாளர்கள் காட்டிய உதாரணம் அமையாது என்றவர்கள் தாம் வேறுகாட்டவுமில்லை. எப்படியும் 'ஙனம்' என்பதனை ஏற்றுக்கொள்ளலாகாது என்பதே அவர்கள் கடைப் பிடி. அதற்கு அவர்கள் கூறுங்காரணம் ஙனம் என்பதனைக் கொண்டால் ஙகரம் மொழிக்கு முதலாகின்றது. ஙகரம் மொழிமுதலாகுமேல் 'முதலாகெழுத்து ஙகரமொடு தோன் றும்' என முதலாகெழுத்தின் வேறாக ஙகரத்தைப் பிரித்துக் கூறுதல் அமையாது என்பதே, நல்லது; அவர்கள் வாதம் எவ்வளவு பொருந்துமென்று பார்ப்போம். தொல்காப்பியம் கூறுவது நிற்க. அங்ஙனம் முதலிய சொற்களுக்கு நன்னூல் விதி கூறுதலின் அது தோன்றுதற்கு முன்பு தொட்டே அச் சொற்கள் வழக்கிலிருந்து வருகின்றன என்பது வாய்மை யன்றோ? பல நூற்றாண்டுகளாக அங்ஙனம் அவை வழங்கி வராநிற்கவும், ஙனம் என்பது ஒருகாலத்தும் ஓரிடத்தும் தனித்து வழங்காமைக்கு அவர்கள் யாது காரணம் கூறுவார் கள்? அஃது அங்ஙனம் வழங்குதற்கும் வழங்காமைக்கும், அவ்வாறு வழங்குதலும் வழங்காமையுமே காரணமென்றுதான்

அவர்கள் கூறவேண்டும்! இவ்வாற்றால், தொல்காப்பியத்தில் யரழமுன் ஙகரம் மயங்கும் என்பதற்கும், ஙகரம் தன்னொடு தான் மயங்கும் என்றதற்கும் தொல்காப்பியம் முழுதுக்கும் உரையெழுதினோராகிய உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் காட்டிய உதாரணங்களே பொருந்துவனவாம் என்பதும், தமிழ் கூறும் நல்லுலகத்து வழக்குஞ் செய்யுளும் ஆராய்ந்து நூலியற்றிய தொல்காப்பியனார் யரழ.ஒற்றின் முன்னும், ஙகர ஒற்றின் முன்னும் ஙகரம் வந்து மயங்கிய சொற்கள் வழங்கினமைகண்டு அவற்றிற்கு விதி கூறியுள்ளார் என்பதும், அவ்வாறாயினும் ஙனம் என்பது யரழ வீற்றுச் சொற்களை யொட்டியும், சுட்டு வினாக்களை யொட்டியும் வழங்கியதன்றித் தனித்து வழங்காமையின் ஙகரம் மொழிமுதற்கண் வருமென்று கூறிற்றிலர் என்பதும், நன்னூலார் காலத்தில் யரழ வொற்றின் முன் ஙகரம் மயங்கிய சொற்கள் வழக்காறற்றுப் போகச் சுட்டுவினாக்களின் பின் ஙனம் என்பது சேர்ந்த சொற்களே வழங்கினமையின் அவ் வழக்கிற்கு மட்டில் விதிகூறினர் என்பதும், ஙனம் என்பது தனித்து வழங்காவிடினும் தனக்கென ஓர் பொருளுடையதாதல் பற்றித்தமது மதம்பட 'ஙவ்வும் முதலாகும்' என்றார் என்பதும் நன்கறியப்படும் உண்மைகளாகும் என்க. ஙகர மெய்யுடன் உயிர் கூடிய பன்னிரண்டு உயிர்மெய் யெழுத்துக்களில் 'ஙா' முதலிய பதினோரெழுத்துக்களும் தமிழ் மொழியில் யாண்டும் வருவதில்லை. அதுபற்றியே "ஙப்போல் வளை" என்பதொரு முதுமொழியும் தோன்றிற்று. அகரங்கூடிய ஙகரந்தானும் 'ஙனம்' என்பதற்கன்றி வேறு சொல்லுக்கு உறுப்பாய் வர யாரும் கண்டதுமில்லை. கேட்டதுமில்லை. இப்பொழுது அதனையும் செகுத்துவிட ரெட்டியாரவர்கள் முயல்கின்றார்கள். அவ்வெழுத்தின் மீது அவர்கட்கு அத்தகைய செற்றம் உண்டாயது என்னையோ!

5. ஙகரத்துடன் ஙகரம் மயங்குதற்கு "உண்ணுங் களிறு" என்னும் ஒற்றளபெடையை அவர்கள் உதாரணங் காட்டியது முழுப்போலியாம் என்பதனைச் சிறுமகாரும் அறிவர்.

ஆசிரியர் தொல்காப்பியனார் நூன் மரபின்கண் மெய்ம்மயக்கங் கூறுவான்றொடங்கி

“டறலள என்னும் புள்ளி முன்னர்க்
கசப என்னும் மூவெழுத் துரிய”

என்பது முதல்

“யரழ என்னும் புள்ளி முன்னர்
முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும்”

என்பது காறுமுள்ள ஏழு சூத்திரங்களால் வேற்று நிலை மெய்ம் மயக்கங் கூறி,

“மெய்ந்நிலை சுட்டின் எல்லா வெழுத்தும்
தம்முற் றாம்வரூஉம் ரழவலங் கடையே”

என்னும் சூத்திரத்தால் மெய்கள் தம்மொடு தாம்மயங்கும் உடனிலை மெய்ம்மயக்கங் கூறுவாராயினர். இவை யெல்லாம் மெய்ம்மயக்கமேயாயினும் தனிமெய்யுடன் உயிர்மெய்மயங்கு மாறு கூறியனவேயாகும். டகரவொற்று முதலாயினவற்றின் முன் தனிமெய்வந்து மயங்குதற்கு இடமின்மையுமோர்க. ஆசிரியர் தனிமெய்யுடன் தனி மெய்மயங்குமியல்பினை, மொழி மரபின்கண்,

“யரழ என்னும் மூன்றும் ஒற்றக்
கசதப ஙஞநம ஈரொற் றாகும்”

என்னும் சூத்திரத்தால் விதித்துப் போந்தனர். நன்னூலாரும் இம்முறை பிறழாமலே வேற்றுநிலை மெய்ம்மயக்கமும், உடனிலை மெய்ம்மயக்கமும், ஈரொற்று மயங்கும் மயக்கமும் கூறுவாரா யினர். உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் இவ்வுண்மைக்கு மாறுபாட்டின்றியே உரையெழுதி,உதாரணமுங்காட்டினர். பின் வந்த இலக்கண விளக்க நூலாரும் இவ்வாறே கூறிப் போந்தனர். இவ்வாறிருக்க, ஒற்றளபெடையில் ஙகரவொற்று இரண்டு வந்தி ருத்தல் போல்வன ‘மெய்ந்நிலை சுட்டின், என்னுஞ் சூத்தி ரத்தாற் குறிக்கப் பெற்றதென்று ரெட்டியாரவர்கள் கூறுவது சிறிதேனும் பொருந்துவதாகுமா? செய்யுட்கே யுரியதென்னுங் கருத்தால் ஆசிரியர் பொருளதிகாரத்துச் செய்யுளியலிற் கூறிய

ஒற்றளபெடையை ஈண்டுக்கொணர்ந்து பொருத்த முயல்வது பெரியதோர் விந்தையே. 'மெய்ந்நிலை சுட்டின்' என்னுஞ் சூத்திரத்தை விட்டுவிட்டால் 'கண்ண்' 'பொன்ன்' என ஒற்றளபெடையில் மெய்கள் மயங்கி நிற்றற்கு இலக்கணம் இன்றெனக் கூறும் ரெட்டியாரவர்கள் உயிரளபெடையில் நெட்டெழுத்தின் பின் அ. முதலிய உயிர்க்குற் றெழுத்துக்கள் மயங்கி நிற்றற்கு இலக்கணம் யாண்டுக் கண்டுள்ளார்கள்? அவை இரண்டெழுத்து மயங்கிய மயக்கம் என்பதே உரையாளர்களுக்குக் கருத்தாயின், எவ்விடத்திலேனும் அவற்றை எடுத்துக் காட்டி அமைத்திருப்பார்களே? ஆசிரியர் யாதேனுமொன்றைக் கூறாது விட்டிருப்பின் அதனை அமைத்துக் கோடற் பொருட்டன்றோ புறனடை, உத்தி முதலாயினவற்றைக் கூறிவைத்துள்ளார்? புறனடை முதலியவற்றிலும் உரையாளர் அவற்றை எடுத்தமைத்திலாமையின், அவை ஈரெழுத்து மயங்கிய மயக்கமல்லவென்பதே அவர்கள் கருத்தாதல் பெறப்படும். அளபெடை என்பது என்னை? நெட்டெழுத்தின் பின்னர் அதற்கு இனமாகிய குற்றெழுத்து வந்தும், ஒற்றெழுத்தின்பின் அவ்வொற்றே வந்தும் முன்னையவற்றின் ஓசையை மிகுவிப்பதே அளபெடையாகும். 'ஆஅ' என்னும் உயிரளபெடையில் அகரம் ஆகாரத்துடன் ஒன்றுபட்டு அதனை மூன்று மாத்திரையினதாகச் செய்ததன்றி, வேறு தனியோசையை உடையதன்றாம். 'கண்ண்' என்னும் ஒற்றளபெடையிலும் பின்னுள்ள ணகரவொற்று முன்னுள்ளதனோடு ஒருமையுற்று அதனை ஒருமாத்திரையினதாக மிகுவித்த அத்துணையன்றி, வேறு தனிப்பட்ட ஓசையினதன்று. மிகூஉம், தரூஉம், தெறாஉம் என்னும் உயிரளபெடைகளில் மிகுஉஉம் தருஉஉம், தெறுஉஉம் என அளபு நிறைக்க வந்த குற்றெழுத்துக்கள் இரண்டும் தனித்தனி யெழுதி வழங்கப் படாமல், நெடில் ஒன்றும் குறில் ஒன்றுமாக எழுதி வழங்கப் படுதலே அளபு நிறைக்கவந்த எழுத்துக்கள் முன்னையவற்றின் வேற்றுமையுடையவல்ல என்பதற்குச் சான்றாகும். இவ்வாற்றால் உயிர்களில் மூன்றுமாத்திரையைக் குறிப்பதற்கு

ஓரெழுத்தும், மெய்களில் ஒரு மாத்திரையைக் குறிப்பதற்கு ஓரெழுத்தும் இல்லாமையாலேயே அவை ஆஅ, கண்ண் என வெவ்வேறெழுத்துக்களாக எழுதப்படுகின்றன என்பது கடைப் பிடிக்க. செய்யுளியலில் மாத்திரைவகையால் அசைகோடலின், அளபெடை நெடிலும் குறிலுமாகப் பகுக்கப்படுகின்றது என்பதும், ஆண்டும் ஒற்றளபெடையிலுள்ள ஒற்று இரண்டும் பகுக்கப்படுதல் இன்றென்பதும் உணரற்பாலன. எனவே, ங்ங், ண்ண், ன்ன் என ஒற்றளபெடையில் வருவன இடையறவு பட்டிசைக்கும் இருவேறெழுத்துக்களாகாமையின், 'அவை மயங்குதற்கு வேறு இலக்கணம் இன்மையின் "மெய்ந்நிலை சுட்டின்" என்னுஞ் சூத்திரம் அம்மயக்கத்தைக் குறிக்க வந்த' தென்பது போலியாதல் காண்க. மற்றும், அச்சூத்திரத்திற் குறிப்பிடப்பெறும் பதினாறு எழுத்துக்களில் வல்லெழுத்தாறும் க்க், ச்ச் என ஈரொற்றாக மயங்காமையின், தனிமெய்யுடன் உயிர்மெய்யாக மயங்குவனவே அவற்றிற்கு உதாரணமாகும். அங்ஙனம் தனிமெய்யுடன் உயிர்மெய் உடனிலையாக மயங்குதல் கூறும் அச்சூத்திரத்தில் மயக்கத்திற்குரியவல்லாத ஒற்றள பெடையின் ஒற்றுக்களைக் கொணர்ந்து புகுத்தி, அவை மயங்கு தற்கு அச்சூத்திரம் விதியாமெனக் கூறுதல் யாமை மயிராற் கயிறு திரிப்பது போலும் வியக்கத்தக்க செய்தியே யாமென்க!

இதுகாறும் செய்துபோந்த ஆராய்ச்சியால் 'அங்ஙனம்' முதலிய சொல்வழக்கைக் கருதியே ஆசிரியர் தொல்காப்பிய னார் 'மெய்ந்நிலை சுட்டின்' என்னுஞ் சூத்திரத்தில் ஙகரம் உடனிலையாக மயங்குமாறு கூறியுள்ளார் என்பதும், அதற்கு மாறாக அங்ஙனம் முதலியன தொல்வழக்கினவல்ல என்றும், அங்கனம் முதலியவே தொல்வழக்கின என்றும் அழிவழக் குரைப்பார் கூற்று ஒருசிறிதும் அடாதென்பதும் நிலைநாட்டப் பட்டமை காண்க. உண்மை இவ்வாறாகவும், யான் முன்பு எழுதியவற்றைக்குறித்து ரெட்டியாரவர்கள் 'காலத்தின் கோலமே' என ஓலமிட்டதும், 'அந்நியாயம் நியாயமே!' எனச் சாபமிட்டதும் எத்துணை நேர்மையுடையன என்பதை அவர்

களாற் கருதப்பட்ட செப்பமுடையோர் ஆராய்ந்து கூறுவாராக.

இனி, "மெய்ந்நிலை சுட்டின்" என்னுஞ் சூத்திரம் 'ஆடி நிழலின் அறியத்தோன்றி, நாடுதலின்றிப் பொருள் நனி விளங்க' அமைந்துளதாகலானும், அதற்கு உரைகண்ட இருவரும் அதன்பொருளை நன்குபுலப்படுத்தியுள்ளாராகலானும் ரெட்டியாரவர்கள் அச்சூத்திரத்தின் பொருளை அறிந்திலர் என்று கருதுவது இழுக்காகும் என உன்னியே, அவர்கள் அதனை மறந்தார்கள் என முன்பு எழுதினேன். ஆயின், அவர்கள் பின்னர் எழுதியவற்றை நோக்கியவிடத்து, அச்சூத்திரப்பொருளை அவர்கள் அறிந்திலர் என்பதும், அதுவேயன்றி, அதற்கு முன்னுள்ள "யரழ வென்னும் புள்ளி முன்னர்" என்னும் சூத்திரப் பொருளையும், அளபெடையின் இயல்பு முதலிய பிறவற்றையும் அவர்கள் அறிந்திலர் என்பதும், அவ்வாற்றால், அவர்கள் எழுதியிருப்பதாகக்கூறும் தொல்காப்பிய எழுத்ததிகாரவுரை வழுக்கள் மலிந்த தொன்றாக இருக்க வேண்டும் என்பதும் புலனாயின.



# வண்ணம்

(S. இராமச்சந்திரன், B. A., கும்பகோணம்)

" மாளாப் புகழ்கொடுக்கும் வண்ணத் தியல்பனைத்தும்
கேளாச் செவியனைத்தும் கீழ்." (வண்ண இலக்கணம்)

செந்தமிழ்ப்பண்பைப்பலபேரும் பலவகையிற்சொல்லுவர். அவைகளில் தலையாவது எண்வகைச் சந்தங்களும் முழங்கும் வண்ணப்பாக்களேயாம். அருணகிரிநாதர் அருளியுள்ள திருப் புகழ், வகுப்பு இவைகளில் சந்தக்குழிப்புப்படியே ஒலியும், பொருளும், ஒழுகிவரும் தென்மொழி மேன்மை மற்றெம் மொழியின் கண்ணுள ? "பொறியோ ரைந்தும் புந்தியுள் அடங்கவின், ஐவகை இலக்கணம் அனைத்தும் செந்தமிழ், வண்ணச் சீருள் வயங்கு மன்றே" என்றும் அதனுல், வண்ணச் செந்தமிழ் வளமை ஓர்ந்தார், நால்வகைப் புலவர் தம்முள் ஏறே" ஆவர் என்றும் வண்ணத்திற்கு இலக்கணநூல் வகுத்த திருப் புகழ்—முருகதாச—தண்டபாணிசுவாமிகள் கூறியுள்ளார். இக்காலத்திலோ ஆங்காங்கு விளங்கி வரும் புலமைத்தமிழர் களில் வண்ணம் பாடுநர் மிகவும் அருமையாக இருக்கின்றனர்.

2. ஒரு செய்யுள் சந்தக் குழிப்புகளை ஆதாரமாகக் கொண்டு வருங்கால் வண்ணச் செய்யுளாகின்றது. தொல் காப்பியம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை முதலிய இலக்கணநூல்களில் கூறியுள்ளவண்ணம் வேறு. அவை, சீர்கள் தளையும் வகையால் விளையும் செப்பல், அகவல், துள்ளல், தூங்கல் என்னும் ஓசை நோக்கிக் கூறப்படுவன. அவற்றின் தொகை நூறு என்பர் அவிநயனர்.

3. சந்தக்குழிப்புகள், தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய என எட்டுவகையாம். இவ்வெட்டின் நீடலாகிய தகை தத்தா, தாத்தா, தாந்த, தாந்தா, தனு, தானு, தன்னு, தய்யா என்னும் எட்டுடன் கூடிப் பதினறும். இவை ஒவ்வொன்றும் ஒரு முழுச்சந்தம். இப்பதினறன்மேல் ன, ஞ

என்னும் உயிர்மெய்கள் தனித்து வரினும், இவற்றோடு த், ம் என்னும் ஒற்றுக்கள் சேர்ந்து வரினும் அல்லது தனித்து வரினும் அவை அரைச்சந்தம் எனப்படும். தந்தன, தந்தனா என்பதில் னவ்வும், னாவும் தனித்து வந்து அரைச்சந்தம் ஆயின, தந்தனத், தந்தனாத், தந்தனம், தந்தனாம் என்பதில் னவ்வும், னாவும் முறையே த், ம், என்னும் ஒற்றடுத்து அரைச் சந்தம் ஆயின. தந்தத், தந்தம் என்புழி த், ம் என்னும் ஒற்றுக்கள் தனித்துவந்து அரைச் சந்தமாயின. தந்தன என்பதில் உள்ள தந்த என்பது முழுச்சந்தமும் ன அரைச் சந்தமுமாகலின் தந்தன என்பது ஒன்றரைச் சந்தம். இங்ஙனமே மற்றவற்றை யும் கொள்ளவேண்டும். வலித்தல் மெலித்தல்களால் தய்ய என்னும் சந்தம் முறையே தனன, தன என ஆகும். தன்னச் சந்தம் மெலித்தலால் தனச் சந்தமாகும்.

4. சந்தங்கள் சில சேர்ந்தது ஒருதுள்ளலாகும். பல வகைத் துள்ளல் சேர்ந்தது ஒரு குழிப்பாகும். அளபில் எண் வகைத் தாகிய சந்தம் புணருமிடத்துத் தோன்றும் குழிப்புகள் கணக்கிலடங்கா பெற்றிபற்றி, "அளவிற் கெண்வகைத்தாகிய வண்ணம், புணர்ப்பிற் றோன்றிப் பொலிவ வாய, குழிப்பின் தொகைக்குக் கோடியும் சிறிதே" என்பர். மூன்று குழிப்பும், ஒரு சிறு தொங்கல் துள்ளலும் சேர்ந்தது ஒருகலையாகும். சிலகலைகள் இரண்டுதொங்கற்றுள்ளல்கள் கொண்டுவரும்.

5. சந்தப்பாக்கள், கலைவண்ணம், வகுப்புவண்ணம் உடற்கூற்றுவண்ணம், வண்ணவிருத்தம், சந்தவிருத்தம் என ஐவகைத்தாம்.

6. எட்டுக்கலை கொண்டதாய், இடையிட்ட எதுகை யுடையதாய், தொங்கலும், தொடையும் பலவாகி வருவது கலை வண்ணம், இவ்வண்ணம் மிக்குவருங்கால் அடிக்கு நான்கு கலையாகவும், எட்டுக்கலையாகவும், பதினாறுகலையாகவும், வருவது முண்டு. கலைவண்ணத்தின் முதற்கலையில் தெய்வச் செயலையும், இரண்டாவது கலையில் கிளை, கொடை, விருது முதலியவற்றை யும், மூன்றாவதுகலையில் புகழையும் வாகையையும் நான்காவது கலையில் நாடுநகரங்களையும் கூறி மற்றைப் பாதியாகிய பின் நான்கு கலைகளிலும் அகப்பொருளில் ஏதாவது ஒரு துறையை அமைப்பர். கலைவண்ணத்தின் முற்பகுதிக்கு ஆண் கலை என்றும் பிற்பகுதிக்குப் பெண்கலை என்றும் கூறுப. தொங்கல்களை ஒன்றாகத் தொகுக்குமிடத்து அவை ஒரு

செய்யுளாக அமைதலுமுண்டு. "வண்ணத்திரட்டு" என்னும் ஒரு அருமையான நூலில் காணப்பெறும் "சிற்றம்பலாவணர் வண்ணம்", "அண்ணாமலையார் வண்ணம்", "செண்டலங் காரப் பெருமாள் வண்ணம்", ஆகியவைகள் கலைவண்ணங் களுக்கு உதாரணங்களாம்.

7. எட்டு, பதினாறு, முப்பத்திரண்டு, அறுபத்திநான்கு என்னும் நான்கு வகையில் கலைவகுத்து நான்கு எதுகையும் அவற்றிற்கு மோனையும் அமைய ஒரு பொருளின் புகழைப் பலபடியாக வகுத்துவகுத்து வருணித்துக் கூறுவது வகுப்பு வண்ணமாம். அருணகிரிநாதர் அருளியுள்ள வேல்வகுப்பு, மயில்வகுப்பு, என்பனவும் கலம்பகம் என்னும் பிரபந்தத்தின் உறுப்பாகிய புயவகுப்பும் வகுப்புவண்ணங்களாம்.

8. மேற்கூறியாங்கு உடலின் தோற்றம், வளர்ச்சி, முடிவு ஆகியவற்றை விதந்தோதுவது உடற்கூற்றுவண்ணமாம். பட்டினத்துப்பிள்ளையார் அருளிய உடற்கூற்றுவண்ணம் இதற்கு உதாரணமாம்.

9. கலைவண்ணம் போல் எட்டுக்கலையும், எதுகைமோனை யும் அமைந்து துதி முதலிய பொருள் கொண்டபாக்கள் வண்ணவிருத்தங்கள் எனப்படும். கலைவண்ணம் போலவே மிக்குவருங்கால் அடிக்கு நான்குகலையாகவும், எட்டுக்கலையாக வும் பதினாறுகலையாகவும் வருதலுமுண்டு. அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் யாவும் வண்ண விருத்தங்களே.

10. பாவும் பாவினங்களும் சந்தக்குழிப்பை ஆதாரமாகக் கொண்டு வருங்கால் சந்தவிருத்தங்களாகின்றன. சிற்சில இடங் களில் ஓசை கெடாது சந்தம்பிறழ்ந்து வருதலுமுண்டு. காவியங் களிலும், புராணங்களிலும், கலம்பகங்களிலும் சந்தவிருத்தங் கள் பயிலப்படுதலுண்டு. சொற்கள் சிதையாமலும் ஓசைநயம் செறிந்தும் உள்ள சந்தவிருத்தங்களை வில்லிபுத்தூர் ஆழ்வார் பாரதத்தில் ஆங்காங்குக்காணலாம்.

11. சந்தப்பாக்கள் வரையும் ஆற்றலுள்ளவர் இயற்றும் பாக்களெல்லாம் ஓசை நயம்பெரிதும் செறிந்துள்ளன. எனவே பொதுவாக தமிழ்ச்சுவையை நுகரும் ஆவலுள்ளாரும் சிறப்பாக பாக்கள் இயற்றும் திறமையுடையாரும் வண்ணப்பாக்களைப் படித்துப் பயன்பெறவேண்டும். உயர்தரவகுப்புக்களில் வண்ண இலக்கணத்தைப் பாடமாக வைத்தலும் சீரிதாம்.

# குரவைக்கூத்து

வித்வான் S. உமைதாணு பிள்ளை, தேரூர்.

தமிழ் நாட்டில் பலவிதமான கூத்துகள் ஆடப்பட்டு வந்ததாக, பண்டைய நூற்களிலிருந்து தெரிய வருகின்றது. அவைகளில் "குரவைக்கூத்தும் ஒன்றாகும்" குரவை யென்பது கைகோத்தாடும் ஒருவிதக்கூத்து. "அவைதாம், சாந்திக் கூத்தும் விநோதக்கூத்துமென், றாய்ந்துற வகுத்தனனகத்தியன்றானே" என்பதனாலறியலாகும். இரண்டாவதாகக் கூறப்படும் விநோதக்கூத்து குரவை, கலிநடம், குடக்கூத்து, தோற்பாவை, எனப் பல பிரிவினையுடையது. குரவை யென்பது காமப் பொருளாகவும், வென்றிப் பொருளாகவும் தலைவன்மீது குரவைச் செய்யுள் பாட்டாக ஏழுமுதல் ஒன்பது பெண்கள் வரை கைபிணைந்து சுழன்றாடும் ஓர் கூத்தாகும்.

"குரவை யென்பது கூறுங்காலைச்
செய்தோர் செய்த காமமும் விறலு
மெய் தக் கூறு மியல் பிற்றென்ப"

(சிலப்பதிகாரம் 3-ம் காதை 12-ம் வரியின் மேற்கோள்)

எனவும்

"குரவையென்ப தெழுவர் மங்கையர்
செந்நிலை மண்டலக் கடகக்கைகோத்
தந்நிலை கொட்ப நின்றாடலாகும்"

(சிலப்பதிகாரம் பதிகம் 77 வரியின் மேற்கோள்)

என்பவைகளிலிருந்து நன்கு விளங்குகிறது. குரவைக் கூத்தென்பது வரிக் கூத்தின் ஓர் உறுப்பென சிலப்பதிகார வுரையில் சொல்லப்பட்டிருக்கின்றது. இது எல்லா நாட்களிலும் ஆடுவதன்று; சிற்சில சமயங்களில் சில நோக்கத்துடன் ஆடப்படுவதாக சிலப்பதிகாரம், முல்லைக்கலி முதலிய நூற்களிலிருந்தும், அவற்றின் உரைகளிலிருந்தும் தெரியவருகின்றது. இது

சிலப்பதிகாரத்தில் உற்பாத சாந்தியின் பொருட்டும், முல்லைக் கலியில் ஏறு தழுவுதல் நிமித்தமும் ஆடப்பட்டதாகத் தெரிகிறது. நமக்குத் துன்பங்கள் ஏதேனும் வந்துவிட்டால், கடவுளுக்கு வழிபாடுகள் செய்து மனச்சாந்தி யடைகிறோம். உற்பாத சாந்தியென்பது பின் வருந் துன்நிமித்தங்களைச் சில குறிகளினால் முன்னதாக அறிந்து அதற்குவேண்டிய பரிகாரங்கள் செய்தல்; சிலப்பதிகாரத்தில் பின்வரும் சில தீங்குகளை முன்னதாக சிலகுறிகளால் அறிந்து கண்ணனைக் குறித்து குரவையாடிய செய்தி இனிது விளக்கப்பட்டிருக்கிறது.

"குரவை தழீஇயா மரபுளி பாடித்
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்
மாசில் வான் முந்நீர் பரந்த தொன்னில
மாளுங் கிழமை யோடு புணர்ந்த
வெங்கோ வாழியரிம் மலர் தலையுலகே."

(கலித்தொகை 103) குரவையினிறுதியில் அரசனையோ, கடவுளையோ, வாழ்த்தி ஆடல் முடிப்பது மரபு. ஆனால் இச் சரிதகத்தில் குரவைக்குரிய தெய்வத்தையன்றி, அரசனையும் வாழ்த்திய வாழ்த்தும் விரவி வந்தமை குறிக்கப்படுகின்றது. இவ்விருவித வாழ்த்துக்களும் விரவி வருவதே மிகவும் சிறப்புடையதாகும்.

இனி குரவைக் கூத்தினைபற்றிப் பிறநூற்களில் குறிப்பவைகளைப் பார்ப்போம்.

"ஆயர் பாடியி லெருத்து மன்றத்து
மாயவனுடன் றம் முனுடிய
வாலசரிதை நாடகங்களில்
வேனெடுங்கட் பின்னையோடாடிய
குரவையாடுதும்."

எனவும்

"மாயவன் றம் முன்னினுெடும் வரிவளைக்கைப்
பின்னையோடுங்
..............................................................
..............................................................
தாதெருமன்றத் தாடுங்குரவையோ தகவுடைத்தே."

எனவும் சிலப்பதிகாரத்தில் ஆய்ச்சியர் குரவையினுள் மாதரி கூற்றாகக் கூறப்பட்டிருக்கிறது.

"இடவலகுடவல" பரிபாடல் 3-ம் பாடல் 'இடவல' என்பதற்கு "ஆய்ச்சியிர் குரவை கோத்தாடலில் அவருக்கு இடமும் வலமும் ஆயினோய்" எனவும்,

"சுடரும் பாண்டிற் றிருநாறு விளக்கத்து
முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணையாகச்
சிலைப்பு வல்லேற்றிற் தலைக்கை தந்துநீ
நளிந்தனை." (பதிற்றுப்பத்து 52-ம் பாடல்)

இத்தொடரில் 'நளிந்தனை' என்பதற்குத் "தன்னைச் சேவிக்கும் மகளிரோடு குரவையாடிச் செறிதல்" எனவும் கூறப்பட்டிருக்கிறது. இப்பாடல் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் அவன் கைவண்மை, வென்றியோடு காம வின்பச் சிறப்பை மிக அழகுபடுத்திக் கூறிய ஓர் நய முடைய பாடலாகும். பதிற்றுப்பத்தில் ஏனைய பாடல்களை விட ஓர் நயமுடைய பாடல் என்று கூறுதல் மிகையாகாது.

"மன்று தோறும் நின்ற குரவை"

(பத்துப்பாட்டு மதுரைக்காஞ்சி 614) மதுரையின் வளத்தைச் சிறப்பித்துக் கூறப்போந்த மாங்குடி மருதனார் முதல் யாமச் சிறப்பில் இக்குரவையைக் கூறியிருக்கின்றனர்,

"...............................................பரதவர்
வெப்புடைய மட்டுண்டு
தண் குரவைச் சீர்தூங் குந்து." (புறம் 24)

எனவும்,

"....................................குறவர் மாக்கள்
வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து
வேங்கை முன்றிற் குரவைய யரும்"

எனவும் குரவைக் கூத்து குறிக்கப் படுகின்றது. குரவைக் கூத்து முல்லைநிலத்து மக்களுக்கே யுரித்தானது. ஆனால் இந்த இருபாடல்களிலிருந்தும், நெய்தல் நிலத்து மக்களாகிய பரத வரும், குறிஞ்சிநிலத்து மக்களாகிய குறவரும் குரவைக்கூத்தைக் கைக்கொண்டொழுகி வந்ததாகத் தெரிகிறது. சிறப்பாக

முல்லைநிலத்து மக்களுக்கே யுரித்தானது எனினும், தமிழ் மக்கள் யாவராலும் கொண்டாடப்பட்டு வந்ததாகத் தெரிகிறது.

" தாதெரு மன்றத் தயவர் தழூஉ " (கலி. 103)

" தாதெரு மன்றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே."
(சில-ஆய்சியர் குரவை.)

இவைகளிலிருந்து குரவையாடுமிடம் எருத்து மன்றம் என வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. குரவையாடுவதற்குப் பரந்த இடம் வேண்டும். பரந்த இடத்தையுடைய இடமே எருத்து மன்றமாக வழங்கப்பட்டிருக்கவேண்டும்.

இனிச் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள குரவைக் கூத்தைப்பற்றி ஆராய்வோம். இது ஆய்ச்சியர் குரவையில் கூறப்பட்டிருக்கிறது. மாதரியும், அவள் மகள் ஐயை முதலிய ஆச்சியர்களால் ஆடப்பட்டமையின் ஆய்ச்சியர் குரவையெனப் பட்டது. சித்திரச் சிலம்பின் செய்தியெல்லாம் பொற்கொல்லன், பாண்டியன் நெடுஞ் செழியனுக்குச் சொன்னான். பொற்கொல்லனது பொய்வாசகத்தை மெய்வாசகமென நம்பி, பாண்டியன் கோவலனைக் கொல்லக் காவலாளர்களுக்குக் கட்டளையிட்டான். கருணை சிறிதுமில்லாத காவற்காரன் ஒருவனது வாளினால் கோவலன் வெட்டுண்டிறந்தான். அதுகாரணமாக கண்ணகியிருந்த இடைச்சேரியில் காய்ச்சிப் பிரையிட்ட பால் தோயவில்லை. மறிகள் மனக்களிப்பின்றித் துள்ளி விளையாடாது சோர்ந்து கிடந்தன. பசுக்கள் உடல் நடுங்கி நின்றரற்றின. அவைகளின் கழுத்தில் கட்டப்பட்டிருந்த மணிகள் விழுந்தன வாகிய பல உற்பாதங்கள் உண்டாயின. அதுகண்ட மாதரி வருவதோர் துன்பமொன்றுள தென்றறிந்தாள். தன் மகள் ஐயையைப் பார்த்து ' அஞ்சற்க ' என்று கூறினாள். ஆயர்பாடியில் எருத்து மன்றத்து முன் மாயவன் தன் தமையனோடாடிய குரவை நாடகத்தைக் கண்ணகிக்குக் காட்டுமாறு 'ஆடுவோம்' என மாதரி உற்பாதசாந்தியின் பொருட்டு திருமாலைக் குறித்து ஆடியதாகக் கூறப்படுபவைகளைப் பார்ப்போம்.

சீற்றமுள்ள, காலி, நெற்றிவெள்ளை, நுண்பொறி வெள்ளை, வெள்ளை முதலிய இளம் ஏறுகளைத் தழுவிப் பிடிப்பானுக் குரிமையாக்கப்பட்ட மணமக்களை அவர்கள் மணக்கின்ற முறையினைப்பாடுவார்கள். ஏழு பெண்களை வரிசையாக நிறுத்தி அவர்களுக்கு, குடதிசையிற், குரல்நரம்பு முதலாக குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என முறையே பெயரிடுவர். பின்னர் குரலை மாயனென்றும் துத் தத்தைப் பின்னை யென்றும் முறையே படைத்துக்கோட் பெயரிடுவர். இவ்வாறு ஏழு பெண்களையும், ஏழு நரம் பாக்கி நரம்பு நிற்கும் நிலைகளிலே நிறுத்துவர். கமழுந் துழாய் மாலையை மாயவனாகக் கருதப்பட்ட பெண்ணின் தோளிலிடுவார் கள். மாதரியே நப்பின்னையாக நின்றாடியவள். சமநிலையில் நின்று,நண்டுக்கரத்தைக் கோர்த்து மண்டலமிருந்து ஆடுவதற்கு மாயவனாயவள் பின்னையைப் பார்த்து "குருந் தொசித் தானை முல்லைப் பண்ணால் பாடுவோம்" என்றாள். "கன்றுகுணிலாக் கனியுதிர்த்தமாயவன்" முதலியனவும், தொழுனைப் புனலுள் கண்ணன் பெண்கள் துகிலை மறைத்தமையும், அவர்கள் இரந்து அவனிடம் வேண்டிய பொழுது, அவன் அழகில் மயங்கி விரும்பி யதையும், அவர்கள் அவனை நயந்ததுமாகிய செய்தியினைஅமைத் துப் பாடுவர். மாயவன் தன் தமையனோடும், பிஞ்ஞையோடும் கோவலர்களுடைய சிறுமிகளின் மாலைகள் அவன்மீது விழுந்த சைய, அசோதைப் பிராட்டியார் கண்டுமகிழ, துவாரகையின் கண் ஆடிய கூத்து மிக நன்றாயிருந்தது என மாதரி வியந்தாள். பின் கண்ணனை முன்னிலையில் நிற்பதாகக் கருதியும், வேறிடத் தில் இருப்பதாகக் கருதியும் பலவாறு புகழ்ந்து வணங்கி, வாயார வாழ்த்துவார்கள். இறுதியில் வேந்தனையும் வெற்றி பெற்று வாழுமாறு வாழ்த்தி ஆடல் முடிப்பதாகக் கூறப் பட்டுள்ளது.

(8-ஆம் பக்கத்தின் தொடர்ச்சி)

### செம்புலப்பெயல்நீரார்

குறுந்—40

‘யாயும் யாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல்நீர்போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே

‘இது

‘புலத்தலிற் புத்தேணுடுண்டோ நிலத்தொடு
நீரியைந்தன்னாரகத்து’
நிலத்தியல்பால் நீர்திரிந்தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்பதாகும் அறிவு’

என்னும் திருக்குறள் பற்றி வந்தது.

செம்புலம்--செம்மண் கொல்லை. ‘வித்துமிடல் வேண்டும் கொல்லோ விருந்தோம்பி—மிச்சில் மிசைவான் புலம்’ என்பதனுள் புலம் அப்பொருட்டாதல் அறிக. ‘உறுபெயல்—தண்டுளிக்கேற்ற பலவுழுசெஞ்செய், மண்போல் நெகிழ்ந்தவர்க் கலுழ்ந்தென்—நெஞ்சறைபோகிய அறிவினேற்கே’ என்பது அகம் 26. ‘செம்புலம் பாலை சேரும் திணை செருக்களம் இரண்டாம்’ என்பது சூடாமணி நிகண்டு. தஞ்சைக்கு மேல்பாலும் தென்பாலும் இச்செம்புலங்கள் நிறையக்காணலாம். இவற்றில் மழைபெய்தால் ஆற்றுவெள்ளமும் ஊருணி முதலியனவும் சிவபெருமானது செக்கர்ச்சடையென நிறம் சிவந்திருக்கும்.

### எயினந்தை மகன் இளங்கீரனார்.

நற் 308,

‘செலவிரைவுற்ற வரவம்போற்றி
மலரேர் உண்கண் பனிவர ஆயிழை
யாந்தற் கரையவு நாணினள் வருவோள்
வேண்டாமையின் மென்மெலவந்து
வினவலும் தகைத்தலும் செல்லாளாகி
வெறிகமழ்துறுமுடி தயங்கநல்வினைப்
பொறியழிபாவையிற் கலங்கிநெடிது நினைந்து
ஆகமடை தந்தோளே அதுகண்டு
ஈர்மட்செய்கை நீர்படு பசுங்கலம்
பெருமழைப் பெயற்கேற்றாங்கெம்
பொருண்மலி நெஞ்சம் புணர்ந்து வந்தன்றே’

தனுள்,

‘ சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துள் நீர் பெய்திரீ இயற்று ’

என்னும் குறட் கருத்து அமைந்தது.

ஔவையார்.

குறுந். 29,

‘ நல்லுரையி கந்துபுல்லுரைத்தாஅய்
பெயனீர்க்கேற்ற பசுங்கலம்போல
உள்ளந்தாங்கா வெள்ளநீந்தி
அரிதயர்வுற்றனை நெஞ்சேநன்றும்
பெரிதால் அம்ம நின் பூசல் உயர் கோட்டு
மகவுடை மந்திபோல
அகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே ’

இதுவும் அது.

நற்றிணை 355

‘ புதல்வனை ஈன்ற பூங்கண்மடந்தை
முலைவா யுறுக்கும் கைபோற் காந்தட்
குலைவாய் தோயும் கொழுமடல் வாழை
அம்மடற்பட்ட அருவித்திநீர்
செம்முக மந்தி ஆரும்நாட
முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்
அஞ்சிலோதி யென்தோழி தோட்டுயில்
நெஞ்சில் இன்புறுய் ஆயினும் அதுநீ
என் கண் ஓடி அளிமதி
நின்கண் அல்லது பிறிதியாதும் இலனே ’

இதனுள்

‘ பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டுபவர் ’

என்னும் திருக்குறள் எடுத்தாளப்பட்டிருத்தல் காண்க.

அங்ஙனம் கொள்வான் என்—நற்றிணைப் பகுதியையே திருக்குறள் ஆசிரியர் எடுத்தாண்டார் என்னின் வரும் குற்றம் யாதோவெனின், நூலென ஒன்று செய்வான் புகுந்த ஓர் ஆசிரியன் பலநூல்களினும் தேடிப் பொறுக்கி நல்லது ஒவ்வொன்றையும் சேர்த்துத் தொகுத்தல் கூடாத காரியம். அன்றியும் இத்திருக்குறளாசிரியர் தெய்வப்புலவர் என்றதற்கும்

அடாது. என்பது கடைப்பிடிக்க. அப்படிக் கூறுவா
எல்லாம் குறுகிய நோக்கமுடையாரென விடுக்க. பொய்
நாவிற்கபிலர் 'நாடி நட்பினல்லது' 'நீரின்றமையா உல
போல' என்றது திருக்குறளை அமைத்துப் பாடியது—'(
னும் ஒருவர் 'அறம்பாடின்றே' என்றதனால் அது சங்
புலவரெல்லாம் திருக்குறளை அறநூல் என்று ஏற்றுக்கொ
டார் என்பதை வலியுறுத்தும் ஆகலின் பிற நூலாரெல்ல
திருக்குறளை யெடுத்தாண்டார் என்றலே முறை.

திருநாவுக்கரசரும்.

'ஆரூரரைக் கையினால் தொழாதொழிந்து கனியிருப்ப
காய் கவர்ந்த கள்வனேனே'

என்று பாடியது

'இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந்தற்று'

என்னும் திருக்குறட் கருத்தமைந்தது.

---

## தமிழ்த் தொண்டர்க்குப் பாராட்டுவிழா

வட ஆர்க்காடுஜில்லா ஆரணி ஜாகீரைச்சேர்ந்த காமக்கூ
வாழ்க்கை கொண்டுள்ளவரும் சைவவேளாளர் குலதிலக
ஆகிய தமிழ்ப் பேராசிரியர் கனம் மு. சுந்தரமுதலியாரவர்
தம் வாழ்நாள் முழுதையும் தமிழ் வளர்ச்சிக்கென்றே ப
படுத்திப் பலபேரை நற்றமிழ் நாவலர்களாக்கி உலகின்பு
கண்டு தாமு மின்புற்றுறைகின்றார்.

தொண்டை நன்னாட்டு மக்களின் பெருந் தவப்பயன
இப்பேராசிரியரிடங் குருகுல முறையிற் கற்ற மாணவர்க
மொழிப் பற்றுடையவர்களும் பெற்ற நன்மைகள் பலவாம்.

ஆகவே இத்துணை நற்றொண்டுபுரிந்த நற்குணக்குன்ற
பேராசிரியர் மு. சுந்தரமுதலியாரவர்கட்குப் பாராட்டுவி
ஒன்று நடத்த முயன்று வருகிறார்கள்.

ஷை விழா 16—6—1938ல் ஆரணி ஜாகீரைச்சேர்
காமக்கூரில் தமிழ்ப்பெருமக்கள் பலரால் கொண்டாடப்ப
மொழிப் பற்றுடையார் பலருங் கலந்து கொள்ளுமாறு வே
டப்படுகிறார்கள். எனப் பாராட்டுவிழாச் செயலாளர் அ
கிறார். இங்ஙனம்,

ஐ. நடேசன், தில்லைவிலாசம், பொன்

---